# தமிழ்த்தென்றல்



கார்த்திகை க.] அணு 4 [16—11—50.



# தமிழ்த் தென்றல்



ஆசிரியர் : வே. வ. இராமசாமி

ஏவவும் செய்கலான்; தான்தேறான்; அவ் உயிர்
போஒம் அளவும்ஓர் நோய். — தமிழ்மறை


| கொடி 4 | திருவள்ளுவராண்டு — 1981<br>கார்த்திகை க. (16—11—50) | பூ 5 |
|---|---|---|


உள்ளுறை

## அட்டைப் படம்

# கவிமணிக்குப் பொன்னுடை போர்த்துப் போற்றினர்

இற்றை நாள் தமிழ்க் கவிஞர்களில் தலைசிறந்த திருவாளர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்களுக்குப் **பொன்னுடை போர்த்துப் போற்றும் விழா** சென்ற 25—10—50ல் நாகர்கோவில் கலைமகள் மன்றத்தில் திருமிகு R. K. சண்முகம் செட்டியார் அவர்கள் தலைமையிற் சிறப்பாக நடைபெற்றது. பெரிது மனமகிழ்கின்றோம். தமிழ் நாட்டின் பற்பல பகுதிகளினின்றும் தமிழ்ப் பெருமக்களிற் பற்பலர் வந்து விழாவிற் பங்கு கொண்டனர். ஆறாயிரம் மக்களுக்கு மேல் குழுமிய பெருந்திரளின் கவியார்வம் நிரம்பிய கனிவுள்ளம் கண்கொள்ளா காட்சியாயமைந்து விளங்கியது. **கலைவாணர் திரு. என். எஸ். கிருஷ்ணன்** யாவரையும் அன்புடன் வரவேற்றார். **ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள்** கவிமணியின் பாடல்களிற் சிலவற்றை ரஸமாகப் பாடிக் காட்டிக் கவிச்சுவையை விளக்கினார்கள். காரைக்குடி **திரு. சா. கணேசன்** அவர்கள், கவிமணியின் கவி இனிமையையும் கவி எளிமையையும் எடுத்துக் கூறி அவையை மகிழ்வித்தார். கோவை **திரு. சி. எஸ். இரத்தினசபாபதி முதலியாரும்,** மதுரை **திரு. பி. டி. ராஜனும்** "கவிமணி உலகம் முழுதும் பாராட்டத்தக்க கவிஞர்; அவர் நீடு வாழ்க" என உளமுருகி விரிவுரை வழங்கினர். பின் **ம. பொ. சிவஞானக் கிராமணியார் அவர்கள்,** "பாரதியை நம்மவர் பாராட்டவில்லை; அக்கால அரசியல் அடக்குமுறையே அதற்குக் காரணம். கவிமணியின் பாடல்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்வன; பட்டிக்காட்டான் உள்ளத்திற் புகுந்து பாட்டு இயற்றிய கவிமணியின் ஆற்றல் அளவிடற்கரியது; கவிமணியுடன் உரையாடும் சுவை அவர் தரும் கவிச் சுவையினும் இனியது" என்று விரிவுரை வழங்கினர். **மகாவித்துவான் K. ஆறுமுக நாவலர்** தொடர்ந்து பேசி மக்களை மகிழ்வித்தார். பின் தலைவர் திரு. R. K. சண்முகம் செட்டியார் அவர்கள், "கவிமணி தந்த கவிதைகள் ஆங்கிலக் கவிதை எவற்றினும் உயர்ந்தவை; **கவிமணி வாழ்கிற காலத்திலே நாமும் வாழ்கிறோம்** என்று கூறிப் பெருமையடைகிறேன்" எனப் பலப்படப் பாராட்டிக் கவிமணிக்குப் பொன்னுடைப் போர்த்துப் போற்றினார்கள். புலவரெல்லாம் பூமாரி சொரிந்து பாமாரி பொழிந்து வாழ்த்தினர்கள்.

## கவிமணி நீடு வாழ்க!

— தமிழ்த்தென்றல்

# தேர்தல்

அடுத்த ஆண்டில் புதிதாகப் பொதுத்தேர்தல் நடைபெற ஏற்பாடுகள் வேகமாக நடைபெற்று வருகின்றன. 1951-ம் ஆண்டு ஏப்ரல் திங்களிலே அரசியல் சட்டத்தின் புதிய விதிகளின்படி தேர்தல்களைச் சுணக்காமல் நடத்தி விட வேண்டுமென்பது முதலமைச்சர் நேருவின் விருப்பம் என்பது தெரிந்தது. அதன்படியே அம்மாதத்தில் கட்டாயம் நடைபெறுமெனவும் தெரிவிக்கப்பட்டது. ஆனல் வடக்கேயுள்ள அநேக் மாகாணங்களில் தாங்கள் ஆயத்தமாக இல்லை என்று தெரிவித்திருப்பதாகவும், ஆகவே முன் ஏற்பாட்டின்படி தேர்தல் ஏப்ரல் திங்களில் நடைபெருமல் அடுத்த நவம்பர்த் திங்களிலேதான் நடைபெறக் கூடுமென்றும் கருதவேண்டியதிருக்கிறது. எப்படியும் இன்னும் பன்னிரண்டு திங்கள் இருக்கின்றன. எனினும் கொரியாப்போர் இன்னும் முற்றுப்பெறவில்லை. இதற்கு நடுவில் செஞ்சீன திபேத் நாட்டின் மீது படையெடுத்து விட்டது. இதை எச்சரித்து நமது அரசாங்கம் அறிக்கை கொடுத்தும் செஞ்சீன அதிபர்கள் பொருட்படுத்தியதாக இல்லை. இந்த ஆக்கிரமிப்பின் விளைவு என்ன ஆகுமென்று சொல்வதற்கில்லை. எப்படியும் நம் நாட்டிற்கு வடபகுதியில் ஆபத்து எந்நேரமும் ஏற்படலாம் என்றே அஞ்சவேண்டிய திருக்கிறது. கிழக்கே பர்மா நாட்டில் உள்நாட்டுக் கலகம் இன்னும் ஓய்ந்தபாடில்லை. மேற்கே பாகிஸ்தானின் குரோதத்தினல் காஷ்மீர்த் தொல்லை இன்னும் ஓயவில்லை. இக் குழப்பமான நிலைமையிலே திபேத் ஆக்கிரமிப்பு ஏற்பட்டிருக்கிறது. நேபாளத்திலும் குழப்பம். ஆகவே நம் அரசியலார் மிகவும் விழிப்பாக இருக்கவேண்டியதிருக்கிறது.

— தமிழ்த்தென்றல்

நம் நாட்டை நாமே காத்துக் கொள்ளக்கூடிய வல்லமையை நாம் இன்னும் பெற்றேமில்லை. எந்தப் பிற நாட்டுடனும் நாம் விரோதமில்லாமல் இருந்தாலும் ஆபத்து வேளையில் கூட்டுப் பாதுகாப்புக்கு எவ்வித உடன்படிக்கையும் யாருடனும் செய்து கொள்ளவில்லை. ஆங்கில நாட்டின் உறவை நாம் அறவே ஒழித்து விட்டபடியால் நாம் விரும்பினுலொழிய அந்நாடு நமக்கு உதவிக்கு வரக் கடமைப்பட்டதன்று. ஒருக்கால் ஆங்கிலேயக் காமன்வெல்த்தின் உறவை முன்னிட்டு முன்வர இசைந்தாலும் அமெரிக்க நாட்டின் அனுமதியும் ஒத்துழைப்பும் இல்லாமல் முடியுமா? என்பது பெரிய பிரச்சினை. இந்தக் கேள்வியை முடிவு கட்டுவது காலத்தின் போக்கைக் கொண்டுதான் சொல்ல முடியுமேதவிர முன்கூட்டிச் சொல்வதற்கில்லை. ஆகவே இம்மாதிரியான நெருக்கடி ஏற்பட்டிருக்கின்ற சமயத்தில் உள் நாட்டில் ஒற்றுமையும் அமைதியும் நிலவவேண்டியது இன்றியமையாததென ஒப்புக்கொள்ளவேண்டும். இந்நிலையில் பொதுத் தேர்தல் நடத்துவது தேவையா? பொருத்தமா? என்ற கேள்வியும் பிறக்கின்றன. மாகாணத்தில் இப்பொழுது இருக்கின்ற சட்டசபைகள் பல ஆண்டுகட்கு முன் தேர்ந்தெடுக்கப்பட்டவை. நாட்டிலிருக்கின்ற இப்போதைய சூழ்நிலையையும் மக்களின் விருப்பங்களையும் எதிரொலிக்கக்கூடிய நிலைமை இந்தச் சட்டசபைகளுக்கு இல்லை. சிறிதும் தகுதியுடையன அல்ல என்றே சொல்லி விடலாம். அதற்குமேல் டில்லியிலுள்ள பாராளுமன்றத்தை நோக்குவோமானுல் அதன் உறுப்பினர்களுக்கும் பொது மக்களுக்கும் எவ்வித நேரடித் தொடர்பும் சிறிதும் கிடையாது.

அப்பேர்ப்பட்டவர்கள் தற்காலச் சமுதாயத்தின் எண்ணத்தை ஈடேற்றத் தகுதி உள்ளவர்கள் என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே அரசியல் அறவழியில் நின்று ஆட்சி புரிய ஆசை கொண்ட அறிஞர் நேரு இப் போலிச்

— தமிழ்த்தென்றல்

சட்டசபைகளைக் கலைத்துவிட்டுத் தம்முடைய திட்டத்திற்கும் போக்குக்கும் மக்கள் ஆதரவு எவ்வளவு இருக்கின்றது என்பதை அறிந்துகொள்ளத் தேர்தலை முன்கூட்டியே நடத்திவிட வேண்டுமென்று துடிக்கிறார் என்பது கண்கூடு. மேலும் காங்கிரசுக் கட்சியின் தலைமைக் குழுவிலே அரசியல் திட்டத்திலும் அரசியல் நடைமுறையிலும் வேற்றுமை வளர்ந்து வருகின்றது என்பது அறியக் கிடக்கின்றது. நேரு தனக்கு ஆதரவைத் தேடுவது போல் அவரிடம் கருத்து மாறுபட்டோர் தங்கள் ஆற்றலையும் திரட்டுவதில் பின்வாங்க மாட்டார்களென்றே தெரிகிறது. நாம் முன்பு ஒருதடவை எழுதியபடி கருத்து வேறுபாட்டைக்கொண்டும் நடைமுறை வேறுபாட்டைக் கொண்டும் காங்கிரஸ் கட்சியில் இரண்டு பிரிவுகள் தோன்றும் என்பதில் ஐயமில்லை. காங்கிரசுக் கட்சியைத் தவிர ஏனைய கட்சிகளும் தங்கள் தேர்தல் முயற்சியைத் தொடங்கிவிட்டன. மேலும் உணவு, உடை முதலிய பற்றுக்குறைத் தொல்லைகளினாலும், வரிப் பளுவினாலும், நிலையற்ற தொடர்பில்லாத பொருளாதாரக் கொள்கையினாலும், மன்னிக்க முடியாத செலவினங்களினாலும், தம் கட்சிக்கு ஒருவாறாகவும் வேறு கட்சிகளுக்கு ஒரு வகையாகவும் நடக்கின்ற தன்மையினாலும், அரசாங்க அதிகாரிகளின் அலுவல்களில் ஆட்சிக் கும்பல்களிற் சிலரும் பலரும் நெறியல்லா வழியில் தலையிடுவதனாலும் மக்களிடத்தில் காங்கிரசின் மேல் அவநம்பிக்கையும் வெறுப்பும் ஏற்பட்டிருக்கின்றன- இவற்றை மறைக்கவே "தேர்தலில் பார்ப்போம்;" "தேர்தலில் பார்ப்போம்" என்று காங்கிரசுத் தலைவர்கள் அறைகூவிக்கொண்டிருக்கின்றார்கள். ஆகையினால் மக்கள் தங்கள் உண்மையான சார்பாளர்களை (பிரதிநிதிகளை)த் தேர்ந்தெடுப்பதற்கு வாய்ப்புக் கொடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. மேலும் உலக அரங்கில் ஏதாவது திடீரென்று குழப்பம் ஏற்பட்டுவிட்டால் அதுபோழ்து பெரும்பான்மையான மக்களின் ஆதரவு பெற்ற அரசாங்கம் இந்தியப் பேரவையில்

இருந்தால் தான் நம் நாட்டினைச் செவ்வனே நடத்திக் கொண்டு போக முடியும். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டுதான் பிற நாடுகளிலும் போர் நடந்துகொண்டிருக்கும் போதே பொதுத் தேர்தல்களையும் நடத்தியிருக்கிறார்கள். ஆகையினால், நமது நாட்டில் வேறு நெருக்கடிகள் ஏற்படுமுன் பொதுத் தேர்தலை நடத்திவிடுவது சாலவும் பொருத்தமென்றே கருதுகிறோம்.

எப்படியும் பொதுத்தேர்தல் வந்தேதீரும். பன்னிரண்டு திங்கட் காலமென்பது வெகு தொலைவு என்று சொல்ல முடியாது. நாட்டின் நன்மையைக் கருதித் தக்க ஆட்சியாளரை ஆட்சி பீடத்தில் வைக்க வேண்டுமென்பது பொது மக்களின் பேரவா. இந்த உணர்ச்சியை நல்ல முறையில் பயன் படுத்துவதில் தான் இருக்கின்றது அரசியல் நுட்பம். நம் தென்னாட்டைப் பொறுத்தமட்டில் காங்கிரசு தான் பலம் பொருந்திய அரசியல் கட்சி. தடைப்படுத்தப்பட்டபடியால் பொதுவுடைமைக்கட்சி கீழேபோய்விட்டது. சமதருமக் கட்சியென்ற பொதுநிலைக்கட்சி பல இடங்களில் வேலை செய்து கொண்டிருந்தாலும் அதற்குத் தமிழ்நாட்டிற் சிறப்பான தலைவர்கள் இல்லை. வடநாட்டுத் தலைவர்கள் வந்து சுற்றுப்பிரயாணம் செய்யுங்காலைத் தலை தூக்கி நின்று பின்னர் நெளிந்துவிடுகிறது. இந்துமகாசபை என்னும் மதக்கட்சியானது அரசியலில் ஈடுபட முனைந்து நிற்கிறது. அதற்கும் செல்வாக்குப் பெற்ற தலைவர்கள் யாருமில்லை. எனினும் தமிழ் மக்கள் மதத்தின் பேரால் நிற்பவர்களுக்குச் சிறிதும் இடங்கொடுக்க மாட்டார்கள் என்பது உறுதி. காங்கிரசுக் கட்சிக்காரர்கள் போலீசுப் பாதுகாவலின்றிக் கூட்டங் கூட்டுவதில்லை என்றும், அவ்வாறு கூட்டினாலும் அக்கூட்டத்திற்கு மக்கள் போவதில்லை என்றும், ஆனால் தங்கள் கூட்டத்திற்குப் போலீசு தடை செய்தபோதிலும் பெருவாரியான மக்கள் கூடுகிறார்களென்றும், தங்களுக்குத் தான் பெரும்பான்மையான மக்களின் ஆதரவு இருக்கிறது என்றுந் திராவிட இயக்கத்

தினர் கூறுகின்றனர். அவர்களுடைய கொள்கை “சமுதாயத்தை மாற்றியமைக்க வேண்டும்” என்றிருந்தபோதிலும் தங்களுடைய குறிக்கோளை ஈடேற்றுவதற்கு மக்களின் உணர்ச்சி வேகத்தைப் பயன்படுத்தி அரசியலைக் கைப்பற்றினாலன்றி இயலுமா என்று சிந்திக்க வேண்டும்.

ஜஸ்டிஸ் கட்சியானது பதினைந்து ஆண்டுகட்கு மேல் ஆட்சி புரிந்ததன் பயனாலேதான் அக்கட்சியின் மூலக் கொள்கைகள் மக்களிடத்திலும் இன்றைய அரசியலாரிடத்திலும் வேரூன்றியிருக்கக் காண்கிறோம். இப்பொழுதிருக்கின்ற அரசியலமைப்பில் தமிழ் நாட்டின் சிறப்புக்கு இடமில்லை; வடநாட்டார் கவலைப்படுவதுமில்லை. உண்ணவும் உடுக்கவும் டில்லியின் விருப்பத்தையே எதிர்பார்க்கவேண்டியதிருக்கிறது. எத்திட்டம் வகுத்தாலும் அனுமதிக்கும், நிதிக்கும் டில்லிக்குத்தான் செல்லவேண்டும். நம் நாட்டை வளப்படுத்தவும், பொருளாதாரத்தைக் காப்பாற்றவும் உரிய ஆற்றல் நம்கைவசமில்லை. இந்த இழிநிலை மாறித் தமிழ் நாடு நன்னிலையடைய வேண்டுமானால், இந்திய அரசாங்கம் அஞ்சும்படியும் மதிக்கும்படியுமாகவுள்ள பிறமாகாணத்தலைவர்கள்போல் செல்வாக்கும் உரமும் படைத்த தலைவர்களை ஆட்சிபீடத்திலமர்த்த வேண்டியது தேவையல்லவா? ஆகையினால், அரசியல் மன்றத்தில் தக்கோரை அமர்த்துவதற்கும், தாங்கள் கூறியபடி மக்கள் ஆதரவு தங்களுக்கே இருக்கின்றது என்பதனை நிலைநாட்டிக் காட்டவும், மற்ற முயற்சிகளில் ஆற்றலைச் சிதறவிடாது ஒருமித்து முயன்று உரியன செய்யவேண்டுவது இன்றியமையாததல்லவா? இதற்கு வருகிற தேர்தல் ஒரு சிறந்த வாய்ப்பு. இதனை நழுவ விடமாட்டார்களென்று நம்புகிறோம்

“பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்குங் கயிறு” (குறள்)

தமிழ் வெல்க!

— தமிழ்த்தென்றல்

# காலத்தின் கோலம்

சென்னைச் சட்டசபைகளிலே நாயகமாக வீற்றிருந்தோர் அநேகர் உண்டு. ஓர் இராச கோபாலனென்ன, ஒரு நரசிம்மனென்ன, ஓர் இராமச்சந்திரனென்ன, ஒரு சாம்பமூர்த்தியென்ன — இவர்கள் வீற்றிருந்த பெருமிதமென்ன? இப்பொழுது நம் மதிப்பிற்குரிய சிவ சண்முகம் அதே பீடத்தில் அமர்ந்திருக்கின்றார். கூர்ந்து நோக்குவோமெனின் நன்கு புலப்படும். இவர் அண்மையில் கோயம்புத்தூரில் அவ்வூர்க் காங்கிரசு நிலையத்தைத் திறந்து வைத்துப் பேசியிருக்கின்றார்.

அவர் குறிப்பிட்டதாவது:— உலகத்திலே ஆங்கில நாட்டுப் பாராளும் மன்றந்தான் சிறந்ததென்றும், அதன் முறைகளையே சென்னை அவையிலும் பின்பற்றி வருவதாகவும், ஆங்கிலநாட்டு அவைத் தலைவர் எக்கட்சியிலும் சேராதவராய் நடுநிலையும் தவறமாட்டாரென்றும், அரசியல் பொழுதுபோக்குச் சங்கங்களுக்குக் கூடச் செல்லமாட்டாரென்றும்புகழ்ந்துகூறியிருக்கின்றார். ஆங்கிலமுறை சிறந்ததென்றும், அதனைப்பின்பற்றி நடப்பதாகவும் சொல்லிவிட்டு ஒரு கட்சியின் நிலையத்தைத் திறந்து வைக்கும் பணியை ஏற்றுக்கொள்ளலாமா? திறந்து வைத்ததோடுமல்லாமல், காங்கிரசார் ருக்குள் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவ வேண்டுமென்றும், தியாக உணர்ச்சி இருக்க வேண்டுமென்றும் கட்சிப் பிரச்சாரம் செய்யலாமா? பொது மக்களே! அங்கு நடப்பதாகச் சொல்வதென்ன? இங்கு இவர் செய்வதென்ன?

**தமிழ் நாட்டில்** உணவு கிடைப்பதில்லை என்று பெரிய கிளர்ச்சியாக இருக்கிறது. தென்னாட்டு மக்களை ஏமாற்றுவதற்காக ஓர் ஆந்திரரைத் தில்லியில் உணவு இலாக்காவுக்குத் துணையமைச்சராக நியமித்திருக்கிறார்கள். தென் பகுதியில் உணவு நிலைமையை நேரில் தெரிந்து கொள்வதற்காகப் பெரிய மந்திரி முன்ஷி வந்தார். அவர் குளத்தைப் பார்த்தார். கோயிலைப் பார்த்தார். மரம் மட்டைகளை நட்டிச் செலவிழுத்து வைத்துப் போனார். காய்களைத் தின்னுங்கள், கிழங்குகளை உண்ணுங்கள் என்று உபதேசம் செய்து போனார். பிற்பாடு குட்டி மந்திரி வந்தார். எங்கெங்கோ சுற்றி வந்தார். அரிசியிருக்கும் இடத்தைக் காட்டுங்கள்: எங்கிருந்தாலும் கொண்டு வருவோமென்றார். பர்மாவிலிருப்பதைக் கொண்டு வர அனுமதி கொடுங்கள் என்று கேட்டனர் சிலர். அந்தப் பொறுப்பு "நடுஇட" ஆட்சியைச் சேர்ந்தது, நீங்கள் கவலையை விட்டொழியுங்

— தமிழ்த்தென்றல்

களென்று தாராளமாகச் சொல்லி விட்டார். பர்மாவிலிருந்து (குருணை) குறுநொய்யரிசியைத் தாராளமாகக் கொண்டு வரலாம். ஆதலால் ஏராளமாகக் கொண்டு வாருங்கள் என்றார் நமது அமைச்சர் ரோச்சு. குறுநொய்யைக் கொண்டு வரலாமா என்று தில்லிக்குத் தந்தி கொடுத்துக் கேட்டதில், "யார் சொன்னது?" என்று அதட்டி விட்டார்கள். இந்த நிலைமையில் நம் மாகாணத்தில் மழை இல்லாமல் பஞ்சம். ஆனால் பீகார் மாகாணத்தில் வெள்ளத்தால் பஞ்சம். மக்கள் பரிதவிக்கிறார்கள். "மக்களுக்குப் போதிய உணவு கொடுக்க முடியாவிட்டால், என் பதவியிலிருந்து விலகிவிடுவேன்" என்று அம்மாகாணத்து உணவு அமைச்சர் மிரட்டினார். தில்லி அரசாங்கம் பயந்தது. முனிசி பறந்தோடினார். தலைவர் பிரசாத் விரைந்து சென்றார். நிவாரண வேலைகள் விரைவாக நடக்கின்றன. நம்மவரின் பணிவென்ன? அன்னவரின் துணிவென்ன?

## அகில இந்தியக் காங்கிரசின்

தலைவர் **தாண்டன்** அவர்கள் தன்னுடைய செயற்குழுவை நியமித்து விட்டார். அதில் மீண்டும் அங்கம் பெற்றமைக்காகத் தமிழன் **காமராசை** மிகவும் பாராட்டுகிறோம். **தாண்டன்** தன்னுடைய செயற்குழு உறுப்பினர்களின் பெயர்ப் பட்டியலை வெளிப் படுத்தியவுடன் செய்தித் தாள்களெல்லாம் வரவேற்றன. காங்கிரசுத் தலைமையில் பிளவு உண்டாகுமென்று எதிர்பார்த்தவர்களையெல்லாங் கேலி செய்தனர். காங்கிரசுக் கட்சிதான் கட்டுப்பாடு உடையதென்றும், பிளவில்லாமல் நடத்தப் படுகிறதென்றும், வரப் போகும் தேர்தலிலே அதற்குத்தான் மக்களின் பெருவாரியான ஆதரவு கிடைக்குமென்றும் அறைகூவுவதோடுந் திராவிட இயக்கத்தினர் அண்ணா கட்சி என்றும், ஐயா கட்சி என்றும் பதவிக்குஞ் செல்வாக்குக்கும் போட்டியிடுகிறார்களென்றும், நையாண்டி செய்கிறார் தமிழ்நாட்டுக் காங்கிரசுத் தலைவர். ஆனால், தமிழ்நாட்டுக் காங்கிரசு வீழ்ச்சியடைந்து விட்டதென்றும், அதைப் புனிதப் படுத்த வேண்டுமென்றும், அதற்காக என் கை கால் பறி போனாலும் நான் துக்கப்பட மாட்டேனென்றுங் கூறிப் புறப்பட்டு விட்டார் புண்ணிவான் (விருதுநகர்) சாது சுப்பிரமணியம் நாடெங்கும் பரப்ப. வரப் போகுந் தேர்தலில் சரியான ஆட்களை நிறுத்த வேண்டுமென்றும், அப்படிச் செய்யாவிட்டால், தான் பொறுக்கு மணிகளை நிறுத்தப் போவதாகக் காங்கிரசு முன்னணி ஒன்றைப் பழைய தலைவர் கிருபளானி நிறுவியிருக்கிறார். இந்த முயற்சிக்கு நேருவின் ஆதரவுகூட இருக்குமாம். தலைவர் தாண்டனின் செயற்குழுவில் முதற் கூட்டம் தேர்தலைப் பற்றிக் கவனிப்பதற்கு தில்லியில் அண்மையில் நடந்தது. அந்தக் கூட்டத்தில் அமைச்சர் நேரு முழுதுங் கலந்து கொள்ளாமல் இடை நடுவில் பம்பாய்க்குச் சென்று விட்டார், அங்குப் பல்லாயிரக் கணக்கான குழந்தைகளோடு விளையாடுவதற்கு. இக் கட்சியும் பாருங்கள்; அக்கட்சியும் பாருங்கள்.

— தமிழ்த்தென்றல்

திருச்சி வானொலி நிலையத்தார் மிகவும் நல்லவர்கள். தங்கள் நிலையத்துக்குள்ளிருந்து கொண்டு எல்லாப் பட்டிதொட்டிகளிலுஞ் சங்கங்கள் ஏற்படுத்துகிறார்கள். ஆயிரக் கணக்கான உறுப்பினர் சேர்த்துக் கொண்டேயிருக்கிறார்கள். தமிழ்மக்களுக்கு எவை விருப்பமென்று நன்றாகத் தெரிந்து கொண்டு அவைகளைப் பாடுபட்டுச் சேகரித்துப் பரப்புகின்றார்கள். இந்தத் தமிழ் வானொலி நிலையத்தைத் தற்சமயம் நிருவகித்து வருகிறவர்கள் தப்பித் தவறித் தமிழ் மாகாணம் ஏற்படும் பொழுது இந்த நிலையத்தில் இருக்க விடாமல் யாரும் செய்து விடக் கூடாது என்பது எமது பெருங் கவலை. ஏனென்றால் எடுத்துக் காட்டாக ஒன்று சொல்ல விரும்புகிறோம். சென்ற ஒன்பதாந் தேதி நடுப்பகலில் தீபாவளிப் பண்டிகையைப் பற்றி ஒரு கதை நிகழ்ச்சி நிகழ்ந்தது.

தமிழர்கள் தீபம் இட்டுக் கொண்டாடுவது கார்த்திகை மாதத்தில்தான். மற்றவர்கள் கொண்டாடும் இந்த தீபாவளிப் பண்டிகைக்கும் தமிழனுக்கும் எந்த விதமான தொடர்புமில்லை. இந்தப் பண்டிகைக்கு எந்த நூலிலும் ஆதாரமில்லை என்பதே ஆராய்ச்சியாளரின் துணிபாகும். அவ்வாறிருக்கப் பொது நிலையமாகக் கருதப்படும் வானொலி நிலையத்தில் அதுவுந் தமிழரது சிறந்த நகரமாகிய திருச்சியிலிருந்து இந்தக் கதையைப் பரப்புவது கொடுமை. அது மட்டுமா? அந்தத் தேதியில் அந்தக் கதை நிகழ்ச்சியை நடத்தியவர் கதைத் தொடக்கத்தில் "போலோ புத்திக்கு ஜே" என்று ஆர்ப்பரித்தார். மேலும் அவர் பேசிய பேச்சுக்களில் ஒரு சொல்லாவது தூய தமிழல்ல. கொடுமை! கொடுமை! தமிழரெனக் கூறிக் கொண்டு, தமிழ் நாட்டில் வாழ்ந்து கொண்டு, தமிழுக்கென ஒதுக்கப்பட்ட தமிழ்வானொலி நிலையத்திலிருந்து கொண்டு, தமிழ் மொழியைக் கொலை செய்வது கொடுமை! கொடுமை! கொடுமை!





— தமிழ்த்தென்றல்

# பெர்னார்டு ஷா

[ வில்லியம் ]

மக்கள்சமு தாயத்தை மடித்தொழிக்கும் குறைதொலைக்கப்
புக்கபல நாடகங்கள் பொழிந்தசெழு முகில்அனைய
தக்கபுகழ்ப் **பெர்னாட்ஷா** சமதருமப் புரவலனை
எக்கணமும் மறக்குமோ இலக்கியமா நல்லுலகம் ?

**பெர்னார்டுஷா மறைந்தார்** என்ற செய்தி அனைவரையும் திடுக்கிடச் செய்வதோடு உலக முழுவதையுமே துயரக் கடலில் ஆழ்த்திவிட்டது. முறிந்த தொடை எலும்பைச் செம்மைசெய்ய மருத்துவ விடுதியில் சேர்க்கப்பட்ட இவர், இரண்டு முறை கருவியிட்டாற்றிய பிறகு தம் இல்லம் திரும்பினார். இளைப்பும் சோர்வும் மிகுந்து தம்மறிவை இழந்து இந் நவம்பர் திங்கள் இரண்டாம் நாள் காலையில் இறந்தார். அப்பொழுது அன்னாருக்கு வயது தொண்ணூற்று நான்கு.

உலக முன்னேற்றத்திற்காகப் பலவிதங்களில் பாடுபட்டு உழைத்த இந்தப் பெரியாரின் மறைவுக்கு வருந்தி, இவர் திறமையையும், அறிவின் வல்லமையையும் புகழ்ந்து, பல நாட்டுத் தலைவர்களும், கூட்டங்களும், பத்திரிகைகளும் ஆங்கில நாட்டிற்குத் தங்கள் துக்கச் செய்திகளை அனுப்பியிருக்கின்றன.

தம்முடைய முடிவு நெருங்கிற்று என்று அறிந்த இவர், இறப்பதற்கு ஒரு வாரம் முன்பே, "என்னுடைய சாம்பலை என் மனைவியின் சாம்பலோடு சேர்க்க வேண்டும். அதற்குப் பிறகு நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யலாம்" என்று சொன்னார். அவர் வாக்கின்படியே அவர் உடலை எரித்து அவர் சாம்பலை, அவர் இல்லாளின் சாம்பலோடு கலந்து **வெஸ்ட் மின்ஸ்டர் அபே** என்னும் திரு விடுதியில் வைக்கப் போகிறார்கள்.

தம் வாழ்விலேயே இலக்கியப் புகழ் பெற்ற மிகச் சிலரில் ஒருவர் இவர். நாடக உலகில் **ஷேக்ஸ்பிய**ருக்கு இணையாகவும், பொருளாதார, சமூக, அரசியல் துறைகளில் ஓர் பேரறிஞராகவும், சீர்திருத்தம், கிளர்ச்சி, சொற்போர், பரப்புதல் இவைகளில் தலைமணியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கினார். அறிவு நிறைந்த நூல்கள் பலவற்றினால் மனித சிந்தனையையே மாற்றினார். சமூகக் குறைகளையும் குருட்டு வழக்கங்களையும், மூடப் பழக்கங்களையும் தமது சிரிப்பென்னும் ஊசியால் குத்தியும் எள்ளல் என்ற கத்தியால் வெட்டியும் கண்டனம் செய்தார். இப்படிச் செய்த அறிவரசரின் வரலாற்றைச் சற்றுக் கவனிப்போம்.

அயர்லாந்தின் தலைநகராகிய டப்ளினில் 1856-ம் ஆண்டில் ஜியார்ஜ் பேர்னுர்டு ஷா பிறந்தார். இருபது வயதாகும் வரை அயர்லாந்திலேயே இருந்து வந்தார். பல பள்ளிகளில் சேர்ந்து படித்தும் பள்ளிக்கல்வியில் பயன் காணுமல், தாமாகவே கற்கத் தொடங்கினர். கல்லூரிப் படிப்பு இல்லாமலேயே தம்முடைய அறிவின் கூர்மையைப் பதினேந்தாம் வயதிலேயே விளங்கச் செய்தார். சில ஆண்டுகளாகச் சிறு வேலைகளில் ஈடுபட்டிருந்து கடைசியில், இலண்டன் மாநகரத்தில்,இலக்கியத்தின் மூலம் தம் பிழைப்பைத் தேட வந்தார். முதலில் சில கட்டுக்கதைகளை எழுதி வெளியிட முயன்றூர். இவைமூலம் வெற்றி ஒன்றும் தோன்ருமல், கதை எழுதும் எண்ணத்தையே நிறுத்தினர்; இவைகளை "இளமைக் கதைகள்" என்று புனைந்தார். ஆனல் இந்தத் "தோல்வி" யே அவரை நாடக மேடையை நோக்கிச் செல்லும்படியாக ஏவிற்று. ஈடில்லா நாடக அரசனுகவும் செய்தது.

1884-ம் ஆண்டில் ஷா வேபியன் (Fabian) கூட்டத்தில் சேர்ந்து சமதருமக் கொள்கையை (Socialism)ப் போற்றவும், அக்கொள்கையையே எங்கும் பரவச் செய்யவும் துவக்கினர். இந்தக் கூட்டத்தின் செயற்குழுவில் அவர் இருபத்தேழு ஆண்டுகள் உழைத்துப்பிறகு 1911ல் விலகினர். இந்தக்கூட்டத்தில் இவர் சேர்ந்த நாள் முதற்கொண்டு, இவர் எண்ணங்களே சமதருமக்கருத்துக்களை அமைத்து ஆண்டு வந்தன. இன்னும் 1888-ம் ஆண்டிலிருந்து 1898-ம் ஆண்டுவரை பல துறைகளில் இவர் குணம் குற்றம் கூறுவோரில் சிறந்தோராக விளங்கினர். பிறகு 1896-ம் ஆண்டில் ஷாலட் பெயின்-டௌன் ஷென்ட் என்ற மாதை மணம் புரிந்து இல் வாழ்க்கையைத் தொடங்கினர்.

இருபதாம் நூற்றுண்டின் துவக்கத்தில், ஆங்கில நாடக மேடையில் உண்டான வியக்கத் தக்க மறுமலர்ச்சி முழுவதும் ஷா வின் முயற்சியினுலும் திறமையினுலுமாம் என்று அஞ்சாமல் சொல்லலாம். பதினேழாம் நூற்றுண்டில் சிதைந்துபோன நாடகக் கலையை எழுப்பிப் புத்துயிர் அளித்த கலைமன்னராகிய இவர் நாடகத்தின் மூலம் வாழ்க்கையை ஆராய்ந்து சோதிக்கவும் விரித்துரைக்கவும் முதலிட்டார். துவக்கத்தில் இவருடைய கருத்துக்களை அறியாதவர்கள் இவரை மூடரென்றும் வீம்புக்காரரென்றும் அழைத்தார்கள். இதற்குக் காரணங்கள் உண்டு. தம்முடைய நாடகங்களில் சமூகக்கேடுகளைத் தாக்கும் பொழுது, இத்தாக்குதலின் கடுமையைத் தணிக்கத் தம் ஊக்கத்தையும் ஆர்வத்தையும் கேலிக்கூத்தில் மறைத்தார். இது சிலருக்கு விளங்காமல் போயிற்று; விளங்கின பின் அனைவரும் இவர் முயற்சியையும் ஆழ்ந்த கருத்தையும் பாராட்டத் தொடங்கினுர்கள். இப்படி இவர் நாடக மேடையேறிச் செய்த தொண்டின் வரலாற்றைச் சற்றுப் பார்ப்போம்.

முதன் முதலாக 1892-ம் ஆண்டில், ஷா, "மனைவி இழந்தோர் இல்லம்" (Widowers' House) என்

னும் தம்முடைய நாடகத்தை வெளியிட்டார். இதில் வீடுகளை வாடகைக்கு விட்டுப் பணத்தைச் சேர்க்கும் சிறு முதலாளிகளினுலுண்டாகும் சமூகக் கேடுகளைக் குறித்துக் காட்டினர். இந்த நாடகத்தின் மேன்மையை உலகம் உடனே அறியவில்லை. இரண்டாம் நாடகமாகிய "மாதர் பின் செல்வோன்" (The Philanderer), மூன்ருவதாகிய "வாரன் அம்மையின் தொழில்" (Mrs. Warren's Profession) வெளிவந்தன; வெற்றி பெருமல் மறைந்து கிடந்தன. இம்மூன்று நாடகங்களும் சமூகக் குறைபாடுகளை எடுத்துக் காட்டும் முறையில் எழுதப்பட்டிருந்தன; மக்களின் மனதை உறுத்தின; ஆனல் நாடகக் கலையில் வெற்றிகளாகக் கருதப்படவில்லை. சோர்ந்து போகாமல் நான்காவது நாடகத்தை எழுதினர். "படையும் மனிதனும்" (Arms and the Man) என்ற இந்த நாடகமே இவருடைய திறமையை மக்களுக்கு முதன்முதலாக விளக்கிக்காட்டிற்று. போர்க்களத்தில் நிற்கும் மறவர் வீரரல்லர் என்று உரைக்கும் இந்த நாடகம் இலண்டன் நகரத்தில் ஒரு பெரிய அமளியை உண்டாக்கிற்று. இதன் மூலம் பெற்ற வெற்றி ஷாவை ஊக்கப்படுத்தி இன்னும் பல நாடகங்களை அடுத்து அடுத்துப் பொழியச் செய்தது. 1939-ம் ஆண்டு வரை, ஆண்டுக்கொரு நாடகமாக வரைந்தார். இவைகளெல்லாவற்றிலும், "பேயின் மாணக்கன்" (The Devil's Disciple) "காண்டிடா" (Candida), "மனிதனும் மேலான மனிதனும்" (Man and Superman), "மெத்து செலாவரைக்கும்" (Back to Methuselah) "செயின்ட் ஜோன்" (Saint Joan), முக்கியமானவை. இவையெல்லாவற்றிலும், இவர் மனிதத் தன்மையை நன்கு ஆராய்ந்துணர்ந்தவர் என்று தெரிகிறது. இந்த நாடகங்களில் நம் எதிரே வரும் நாடக மாந்தர் இயற்கையிலே நாம் காணும் ஆணும் பெண்ணும் போலக் காணப்படுகிருர்கள். ஷேக்ஸ்பியரைப்போல மக்கள் பால் அளவிலா இரக்கம் கொண்டுள்ள இவர், தம் வாழ்நாட்களையெல்லாம், விழுந்து தளர்ந்து போன மக்களுக்கும், நசுக்கப்பட்டவர்களுக்கும் ஊழியம் செய்வதில் செலவிட்டார். சமூகக் குற்றங்களைச்சுட்டிக் காட்டும் பொழுதும், எள்ளி நகையாடும் பொழுதும், மக்களிடையே கசப்பும் வெறுப்பும் விளையாவண்ணம், அக்கறையோடு கண்டனம் செய்தார். குறையைக் குத்தினர். குறையுள்ள மனிதனையோ எழுப்பித் தாங்கினர். மானிட இனத்தில் வஞ்சகனையே தாக்கினர். தன்னை வெறும் நாடக ஆசிரியனுகக் கருதாது, நாடகத்தின் வாயிலாக சமூக சீர்திருத்தம் செய்பவனுகக் கருதவேண்டும் என்று வற்புறுத்தினர். நாடக மேடையை, தாக்குதலுக்கு ஒரு கருவியாகப் பயன் படுத்தினர். இந்தக் கருவியைத் தாங்கி, இயன்றதையே அழிவுக்குக் கொண்டுவர முயன்ருர்.

இந்த நாடகங்கள் மூலம் ஷா கற்பிக்கும் கருத்தாவது: —இவ்வுலகில் பல குறைகளால் மக்கள் தற்சமயம் சிதைந்து கிடந்தாலும் நாம் சோர்ந்திருக்க வேண்டியதில்லை. ஏனென்ருல் இயற்கையிலிருக்கும் 'உயிர் வல்லமை' Life force, Elan Vital) நம்மைப் படிப்படியாகக்

கைதூக்கி, நேர்மையையும் நிறைவையும் அடையச் செய்யும். இம்முன்னேற்றக் கடைசியில் மேலான மனிதன் (Superman) தோன்றுவான். குரங்கிற்கும் தற்போதைய மனிதனுக்குமிடையே எவ்வளவு வேற்றுமை இருக்கிறதோ, அவ்வளவு வேற்றுமை மனிதனுக்கும், மேலான மனிதனுக்கும் இருக்கும். இத்தகைய நிறைவுற்ற பின் மக்கள் வாழ்வில் குறைகளோ, குற்றங்களோ காணப்பட மாட்டா. இதே ஷாவின் ஆழ்ந்த கருத்து. திடமுள்ள நம்பிக்கை, மேன்மையான கற்பனை இந்த உண்மையையே தயங்காமல் அவர் எழுதிய யாவற்றிலும் வெளிப்படுத்துகிறார்.

இங்கு ஒரு சிறு நிகழ்ச்சி குறிப்பிடத்தக்கது. சமதருமக் கொள்கையில் இவர் நம்பிக்கை வைத்திருந்தும் சில நாடகங்களில் வியக்கத்தக்க விதமாக வேறு பற்றுதல்களையும் காண்பிக்கிறவர் போலத்தெரிகிறார். உதாரணமாக, "ஆப்பிள் வண்டி" (The Apple Cart) என்னும் நூலில் முடியரசைப் போற்றுகிறார். பிறகு "பாறை மேல்" (On the Rocks) என்ற புத்தகத்தில் குடியாட்சியின் கொள்கைகளில் சிலவற்றைத் தாக்குகிறார். பொதுவுடைமையைக் கைக்கொண்ட இவர் இப்படி எழுதுவது சிறிது வியக்கத் தக்கதே. ஆனால் ஒன்றை நாம் மறவாதிருந்தால் வியப்பு, மகிழ்ச்சியாக மாறும். அதாவது தற்போதைய உலகத்தில் உலவும் பல கொள்கைகளை ஆராய்ந்து இப்பேரறிஞர் ஏதொன்றிலும் முழுவதுமாக நம்பிக்கையோ பற்றுதலோ காட்டவில்லை. பிற்காலத்தை நோக்கிப் பார்த்து, தாமே ஓர் வழியையும் கொள்கையையும் அமைக்க முயன்றார். ஆதலின் இவர் பற்றின கொள்கை, இவர் எதிர்பார்த்த வழி, இவர் புகட்டிய பாடம், ஒரு புதிய கொள்கை எனவும் அதை **ஷாவியரிஸம்** என்றல்லாது வேறு எம்முறையிலும் புனைந்துரைக்க முடியாது என்றும் சொல்லக்கூடும். இதைக் குறித்துச் சிந்திக்கையில், ஷா இறந்த விடுதியின் சுவரில் ஸ்டாலின் படமும், பலகையின்கண் புத்த சிலையும் இருந்தமை நம் நினைவிற்குப் புதிய கருத்தோடு வரும்.

இப்படியாக இவர் நாடகங்களை மழை போல் பொழிந்து கொண்டிருக்கும் பொழுது, 1926-ம் ஆண்டில் ஷாவின் எழுத்து வல்லமையைப் பாராட்டி, **நோபல் இலக்கியப் பரிசு** இவருக்கு அளிக்கப்பட்டது. இப்பெருந் தொகையை ஸ்வீடன் நாட்டு இலக்கிய முன்னேற்றத்துக்காகக் கொடுத்தார்.

ஷா வென்பவர் யார் என்ற வினாவிற்கு, ஒரு பள்ளி மாணவன் 'சிறு நாடகங்களுக்கு நீண்ட முகவுரை எழுதுபவர்' என்று விடையளித்தான். ஒரு வழியில் இது உண்மை என்றே சொல்லலாம். ஏனென்றால் தம் கருத்தை வெளிப்படுத்தவே நாடகத்தைக் கருவியாகக் கொண்ட இவர், தம் நாடகத்தில் பதிந்திருக்கும் கருத்துக்களை செம்மையாக விளக்க முகவுரைகளை எழுதினார். இவரது நாடகங்கள் சேர்க்கப்பட்டு 1931-ம் ஆண்டில் வெளியாயின. மூன்றாண்டுகளுக்குப் பின் முகவுரைகளைச் சேர்த்து ஒரு நூலாக வெளியிட்டார். மக்களுக்கு

— தமிழ்த்தென்றல்

இவரது நாடகங்களில் எவ்வளவு பற்றுதலுண்டோ அவ்வளவு பற்றுதல் முகவுரைகளிலும் உண்டு.

இவை தவிர்த்து, ஏனைய நூல்கள் மூலமும் மக்களை ஷா முன்னேற்றினர். இவைகளில் "அறிவுள்ள மாதரின் வழி காட்டி" (The Intelligent Woman's Guide) "எல்லோருடைய அரசியல் அகராதி" (Everybody's Political What's What) என்ற கட்டுரைகள் மிகச் சிறந்தவை. இப்படி மக்களின் நேர்மைக்காகவும், முன்னேற்றத்திற்காகவும் உழைத்த இன்னர் புவியிலிருந்து மறைந்தாரென்ருல், ஆங்கில இலக்கியத்திற்கு மட்டுமல்ல; உலகத்திற்கே பெரியதோர் இழப்பு!

கடைசியாக நாம் கவனிக்க வேண்டியது என்னவென்ருல், பிற்காலத்தில் ஷாவுக்கும் அவர் புத்தகங்களுக்கும் என்ன மதிப்பு இருக்குமென்பதே. இவர் இயற்றிய நூல்களில் பல நாளடைவில் சிதைந்து போம் என்றும், ஒன்று அல்லது இரண்டே எக்காலத்திலும் இலக்கியமாகக் கொள்ளப்படும் என்றும் சிலர் கருதுகிருர்கள். இதற்குக் காரணம் என்னவென்ருல் தம் நாடகங்களிலும் கட்டுரைகளிலும் தற்கால உலகிலிருக்கும் குற்றங்குறைகளையே எடுத்துக்காட்டுகிருர். ஆதலின் இக்குறைபாடுகள் நீங்கிய பின் பிற்காலத்தில் இவரது புத்தகங்கள் தேவையில்லாமல் போய்விடும் என்றுசிலர் சிந்திக்கிருர்கள். இப்படிச் சொல்வதில் ஒரு சிறு பிழையுண்டு. அதாவது:— இலக்கியத்திற்கும் மனித வாழ்க்கைக்கும் உறுதியான ஓர் உறவு உண்டு. ஆகையால் வாழ்க்கைத் துறைகளையடுத்து எழுதப்பட்ட ஷாவின் நூல்கள் எக்காலத்திலும் சிறந்து விளங்குமென்பதை ஐயமில்லாமல்கூறலாம்.

உலக இலக்கியத்தின் ஓங்குபுகழ்த் தந்தை ;
பலகலைதேர் பேர்னுட்ஷா ; பாரில் — இலகுபுகழ்
நாடகமாம் பொன்மலைமேல் நல்விளக்குப் போல்வானை
நாடி இனிக் காண்போமோ நாம் ?

# பிரிட்டனில் சோஷலிசம்



டாக்டர் பா. நடராஜன், எம். ஏ., டி. லிட்.
(சென்னை அரசாங்கப் பொருளாதார ஆய்வுரைஞர்)

சோஷலிசம் என்ற சொல்லைக் கேட்டதும், நம் முன்னே கம்ப சித்திரங்கள் பல ஒன்றன்பின் ஒன்ருய் வந்தாடுகின்றன. கம்பன் கண்ட கோசலம் என்னும் கற்பனை நாடும், அயோத்தி என்னும் கனவுக் கலை நகரமும் நம்மை ஒரு இலட்சிய உலகுக்கு எடுத்துச் செல்கின்றன.

"எல்லாரும் எல்லாப் பெருஞ்
செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை, உடையார்
[களும் இல்லை மாதோ"

என்ற அடிகள் மீண்டும் மீண்டும் ஒலிக்க, காதிலே தேன் வந்து பாய்வது போன்ற இன்பப் பெருக்கம் எடுக்கின்றது. பிரிட்டனில் சோஷலிசம் என்றதும் இத்தகைய ஒரு இலட்சிய உலகத்தில் போய் இறங்குவோம் என்று பிரயாணி எதிர்பார்த்தால், பெரிய ஏமாற்றமடைகிருன். இன்பக் கனவு கடுமையான நனவாகிறது. எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தவில்லை. இல்லாரும் உண்டு. உடையாரும் உண்டு. உணவிலும் ஏற்றத் தாழ்வுகள் உண்டு. இரயிலில் கூட வகுப்பு வேற்றுமைகளுண்டு.

அப்படியானால், சென்ற ஐந்து ஆண்டுகளில் தொழிற் கட்சி சோஷலிஸம் என்ற பெயரால் சாதித்ததென்ன? எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தவில்லையானாலும், ஒருவனுக்காவது உணவில்லை, ஒருவனுக்காவது தொழிலில்லை என்ற நிலை ஏற்படாது காத்து வந்திருக்கிருர்கள். மனித வாழ்வை நிலை குலையச் செய்யும் வறுமை, பிணி, அசுத்தம், மடமை, மடிமை என்ற ஐந்து பெரும் அரக்க சக்திகளை மடக்கி, அடக்கி, வெல்ல பெரியதொரு சமூக அரண் திட்டத்தை வகுத்திருக்கிருர்கள். ஜான் ஸ்மித் என்பவன் ஒரு ஆங்கிலத் தொழிலாளி. மனைவியையும் இரண்டு குழந்தைகளையும் கொண்டது அவன் குடும்பம். குடும்பம் நோய்வாய்ப்படுகிறது. மருத்துவ உதவிக்கு எங்குப் போவோம் என்ற கவலை அவனுக்கு வேண்டியதில்லை. எந்த டாக்டரிடம் சிகிச்சை பெற விரும்புகிருனே அந்த டாக்டர் அவன் குடிசையைத் தேடி வருகிருர். டாக்டர் பில் அனுப்புவதில்லை. சமூக இன்ஷுரன்ஸ் பொது நிதியிலிருந்து டாக்டர் நிலையான சம்பளம் பெறுகிருர். அவன் மனைவிக்குத் தனி லேடி டாக்டர் வேண்டுமானுலும் அதற்கும் தடையில்லை. பல் வைத்தியம், கண் வைத்தியம் யாவும் இலவசமே. போலிப் பல், மூக்குக்

கண்ணாடி — அவையும் இலவசமே. மனைவி கர்ப்பமானால் பிள்ளைப் பேறுக்கு முன்னும் பின்னும் மருத்துவ உதவி உண்டு. குழந்தை பிறந்த அன்று 4 பவுண் அல்லது 53 ரூபாய் குடும்பத்துக்கு நன்கொடை. பிறந்த குழந்தை பள்ளிக்கூடம் போகும் வரை வாராவாரம் அதன் பராமரிப்புக்காக ஐந்து ஷிலிங் அல்லது கிட்டத்தட்ட இரண்டேமுக்கால் ரூபாய் பொது நிதியிலிருந்து வழங்கப் படும். இதற்கிடையில் ஜான்ஸ்மித் நோய் வாய்ப் பட்டு வேலைக்குப் போக முடியாதுபோனால், வாரம் ஒன்றுக்கு அவனுக்கு 26 ஷிலிங் அல்லது சுமார் ரூபாய் 17—4—0ம், அவன் மனைவிக்கு 16 ஷிலிங் அல்லது சுமார் ரூபாய் 10—10—0ம், அவன் மூத்த குழந்தைக்கு 7½ ஷிலிங் அல்லது ஐந்து ரூபாயும், மற்றக் குழந்தைகளுக்கு ஆளொன்றுக்கு 5 ஷிலிங் அல்லது ரூபாய் 3—4—0ம் சமூக இன்ஷூரன்ஸ் நிதியிலிருந்து வழங்கப் பெறும். ஸ்மித்துக்கு வேலை இல்லாது போனால், 6 மாதம் வரை குடும்பத்துக்கு உதவியளிக்கப் படும். ஸ்மித்துக்கு 65 வயதுக்கு மேற்பட்டு விட்டாலும், வாரம் ஒன்றுக்கு ரூபாய் 17—8—0 பென்ஷனைக் கொடுக்கப் படும். அவன் இறந்ததும் அவன் விதவைக்கும், அவனது குழந்தைகள் படிப்பு முடிவுறும் வரையும் தகுந்த அளவு உதவி அளிக்கப் படும். ஈமக் கடன்களுக்கு ரூபாய் 235—0—0ம் உண்டு. இவ்வாறாகத் தொட்டில் முதல் சுடுகாடு மட்டிலும் வழங்கும் இன்ஷூரன்ஸ் நிதிதான் இன்று பிரிட்டனில் இரு நிதியம் போன்று சமூக அரண் திட்டமாகச் சிறந்து விளங்குகின்றது. பிறப்பு முதல் இறப்பு வரை, வறுமை முதல் மடிமை ஈறாக ஐந்து அரக்கர்களால் வாழ்விலே வரும் அச்சத்தைப் போக்கப் பெரியதொரு இன்ஷூரன்ஸ் முறை பிரிட்டன் வகுத்து நடத்துகிறது. உற்பத்தியைப் பெருக்க, ஆட்டமில்லாத சமூக அமைப்பை நிலை நாட்ட, சமூக சமத்துவத்துக்கு அடிகோல சமூக அமைப்புத் திட்டமின்றி பயன்படாதென்று ஆங்கில மக்கள் அறிந்து கொண்டனர். **கவலையே கொல்லும்** என்றார் பாரதியார், அந்தக் கொல்லும் கவலைக்கு அடிப்படையாயிருக்கும் வறுமை, பிணி முதலிய ஐந்து பைசாசங்களையும் விரட்டி வாழ்வில் தள மட்டத்தைச் செப்பனிடுவதே முதற் பணியாகவும் முதன்மைப் பணியாகவும் மேற்கொண்டது பிரிட்டனின் சோஷியலிஸம். சுதந்திரம், சுதந்திரம் என்பது பல ஆண்டுகளாக ஓட்டுக்கொடுக்கும் அரசியல் சுதந்திரமாகவேயிருந்தது. சோஷலிசம் வந்ததுக்குப் பின்தான் பிரிட்டனில் சுதந்திரமென்பது வறுமையில்லாது இருக்கும் சுதந்திரம், பிணியில்லாது வாழும் சுதந்திரம் என்ற பொருளாதார சுதந்திரமாய் உருக்கொண்டது.

இப்படியாக அடிப்படையான பொருளாதார உரிமைகள் பெற்றது ஒரு பெரிய நிகழ்ச்சியே. ஆனால் அதனினும் பெரிது அதை எவ்வாறு பிரிட்டிஷ் மக்கள் பெற்றனர் என்பதேயாகும். பெரியதொரு புரட்சி நடந்தேறி விட்டது. தனி முதலாளிகளிடமிருந்த எத்தனையோ தொழில்கள்—நிலக்கரிச் சுரங்கங்கள், இரும்பு எஃகுத் தொழிற் சாலைகள் ரயில்வேக்கள், மின்சார நிலையங்

— தமிழ்த்தென்றல்

கள், இங்ஙனமாக எத்தனையோ பெரிய தொழில்கள் விழித்தெழுமுன் தேசப் பொதுச் சொத்தாகி விட்டன. ஆயினும், இப் பெரும் புரட்சி கத்தியின்றி, ரத்தமின்றி, சத்தமுமின்றி நடந்தேறியது. இதுதான் பிரிட்டிஷ் சோஷலிசத்தில் பொதுமக்கள் பெற்றதை விட, இன்னும் பெற இருப்பதைவிட, நடந்தேறிய அதிசயம்.

சோஷலிசச் சோதிடர்களனைவரையும் ஒருங்கே பொய்யாக்கி விட்டது பிரிட்டனின் சோஷலிசம். இங்கிலாந்தில் தான் **வருக்கப் போர்** முதன் முதலில் தோன்றுமென்றும், மிக வேகத்தோடு தோன்றுமென்றும், முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் எழும் போரால் தேம்ஸ் நதியிலே ரத்த வெள்ளம் புரண்டோடுமென்றும் **கார்ல் மார்க்ஸ்** போன்ற சோஷலிசத்தின் குருமார்கள் சாதித்து வந்தார்கள். பிரிட்டனில் சோஷலிசம் அவர்களை ஏமாற்றி விட்டது. சமாதானத்தோடு மாறுதல் ஏற்பட்டது என்பது மட்டுமல்ல, சமூக நடவடிக்கையிலே, ஒழுக்கத்திலே, சோஷலிசத்தால் திடீரென்று எவ்வித மாறுதலும் உண்டாகி விடவில்லை. தொழிலாளர் ஆட்சி வந்துவிட்டதென்று சொல்லி, தொழிலாளர் ஏனையோரைத்தொன்றுதொட்டு வந்த நியதியிலிருந்து புரட்டி விடவில்லை. ஏனையோரை அலட்சியமாக நடத்தவில்லை. பஸ் அரசாங்கத்துக்குச் சொந்தமானதும் கன்டக்டர்கள் தமக்கே சொந்தமானதற்கு மேலாக நினைத்துக் கொண்டு பிரயாணிகளை அவமதிப்பதில்லை; அல்லது டிக்கட்டே கொடுக்காதபடிக்கு செக்கிங் இன்ஸ்பெக்டருக்குத் தெரியாமல் பணத்தை சொந்த பாக்கெட்டுக்குள் போட்டுக் கொள்வதுமில்லை. தொழிலாளர்கள் நிமிர்ந்து நடக்கிறார்கள். ஆனால் பிறர்மேல் மிதித்து நடக்கவில்லை. பொருளாதாரசுதந்திரத்தால் சமூக நல்லொழுக்கங்கள் மாறவில்லை.

புரட்சி இல்லா முறையில் இந்தப் பெரும் புரட்சியை எங்ஙனம் பிரிட்டிஷார் நடத்தி வைத்தார்கள்? சமூக வருமானத்தில் 10 வருஷங்களுக்கு முன் பெரிய ஏற்றத் தாழ்வுகள் இருந்து வந்தன. மலைக்கும் மடுவுக்கும் இருந்த வேற்றுமை என்றே சொல்ல வேண்டும். ஜனத் தொகையில் 3 சத விகிதத்தினர் சமூக வருமானத்தில் மூன்றிலொரு பகுதியை எவ்விதத் தொழிலும் செய்யாது உண்டு கழித்து வாழ்ந்து வந்தனர். பெரும்பாலான மக்கள் அடிப்படை தாங்க, ஒரு சிலர் பொம்மை போலவும் கும்பம் போலவும் காட்சி தரக் கோபுரம் போன்று விளங்கியது சமூக அமைப்பு. இதை மாற்றியமைக்க வந்தது பிரிட்டனின் சோஷலிசம். உழைத்து வரும் வருமானத்துக்கும்—உழையாது வரும் வருமானத்துக்கும் நிலையான பாகு பாடு செய்தும், சிறுகிய வருமானத்துக்கும் – பெருகிய வருமானத்துக்கும் அடிப்படையான வேற்றுமை வகுத்தும், வருமான வரி முறையைத் திருத்தி அமைத்தனர். திருந்திய இந்த வரி விதிப்பு முறையால் நாட்டின் பொருளாதார அமைப்பு ஓரளவுக்குச் சமன் செய்யப் பட்டது. வறியவர் இறந்தால் ஈமக் கடனுக்குச் செலவுப் பணம் ஈந்து வரும் சோஷலிசம், செல்வர் இறந்தால் அவர்கள் சொத்துக் கேற்ப விதிக்கப் படும்

இறப்பு வரியை உயர்த்திச் சமூக ஏற்றத் தாழ்வைச் சமன் செய்ய முயலுகிறது. லட்சம் முதல் 1½ லட்சம் பவுண் சொத்துக்களில் பாதியும் 10 லட்சம் பவுனுக்கு மேற்பட்ட சொத்துக்களில் முக்கால் பங்குக்கு மேலும் இறப்பு வரியாக அரசாங்கத்தைச் சேருகிறது. பரம்பரையாக வாரிஸார்கள் முழுச் சொத்தையும் அனுபவிப்பது இனி இயலாது.

வரி விதிப்பு முறையினால் சமன் செய்ததுமன்றி, அரசாங்கம் செய்யும் செலவு முறையினாலும் எளியவர்க்கு அநேக சலுகைகள் காட்டி அவர்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தியிருக்கிறது. பழைய நண்பர் ஜான் ஸ்மித்தின் குழந்தைகளுக்கு ஆரம்பக் கல்வியும் உயர்தரக் கல்வியும் இலவசமாக அளிக்கப் படுகிறது. புத்தகங்கள், பேனா, பென்சில், காகிதம் இவை யாவும் இலவசமே. பையன் கெட்டிக்காரனாக இருந்தால், கல்லூரியில் படிக்க ஸ்காலர்ஷிப் கொடுத்து உதவுவார்கள். இப்படிக் கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப்புகள் ஆண்டொன்றுக்கு 22000க்கு மேலாகிறது. பள்ளிக்கூட மாணவ மாணவிகளுக்கு மத்தியானச் சாப்பாடும் பாலும் வழங்கப் படுகிறது. சுமார் 24 லட்சம் பள்ளிப் பிள்ளைகளுக்குச் சாப்பாடும், 43 லட்சம் குழந்தைகளுக்குப் பாலும் தினந்தோறும் வழங்கப் படுகிறது. சென்ற வருஷம் தேசீயக் கல்விக்காக அரசாங்கம் 243 கோடி ரூபாய் செலவழித்திருக்கிறது; அதாவது தலைக்குச் சராசரி 48 ரூபாய் செலவாயிருக்கிறது.

இரண்டாவது உலக மகாயுத்தத்தில், பிரிட்டனில் பத்தில் ஒரு பங்கு வீடுகள் விமானத் தாக்குதலால் நாசமாயின. வீடிழந்தோருக்கு வீடு வசதி அளிக்க ஒரு பெரிய திட்டம் வகுக்கப் பட்டிருக்கிறது. வருடத்துக்குச் சுமார் 2 லட்சம் வீடுகள் கட்டப் படுகின்றன. பார்லிமெண்ட் சபை தற்காலிக வீடுகள் கட்டுவதற்கு மாத்திரம் சுமார் 300 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது. புதிய வீடுகள் கட்டுவதுமன்றி, வீட்டு வாடகையை மட்டுப் படுத்த வீடொன்றுக்கு சுமார் 300 ரூபாய் மானியமாக வழங்கி வருகிறது. ஸ்தல ஸ்தாபன அதிகாரிகள் 12 லட்சம் வீடுகள் கட்டுவதற்கு அடிகோலியிருக்கிறார்கள்.

பிரிட்டனுக்கு வேண்டிய உணவு பாதிக்கு மேல் வெளி நாட்டிலிருந்து வரவேண்டியிருக்கிறது. உணவுப் பொருள் குறைந்த விலையில் மக்களுக்குக் கிடைக்கும் படிச் செய்ய வருடத்துக்கு 616 கோடி ரூபாய் மானியமாக வழங்கப் படுகிறது. எல்லா உணவுப் பொருள்களுக்கும் விலைக் கட்டுப்பாடு உண்டு. அவைகளைக் குறித்த அளவில் பங்கீடு செய்கின்றனர். ஆயினும் தலைக்கு நாள் ஒன்றுக்கு சுகவாழ்வுக்கு வேண்டிய சுமார் 3000 காலரிச் சத்து என்றும் குறையாமல் கிடைத்து வருகிறது. மாமிசப் பொருள்கள் மட்டுமே யுத்தத்துக்கு முன்னிருந்த அளவை விடச் சிறிது குறைந்திருக்கின்றன. ஆனால் பால், மீன், காய்கறிகள் முதலியனவற்றை முன்னை விட அதிகமாக அருந்துகிறார்கள். மொத்தத்தில் மக்களின்

— தமிழ்த்தென்றல்

[20-ம் பக்கத் தொடர்ச்சி]

தேக ஆரோக்கியம், வலு, உழைக்கும் சக்தி முதலியன யுத்தத்துக்கு முன் இருந்ததை விட அதிகரித்துள்ளன.

புதிய வரி விதிப்பு முறையினாலும், சமூக சேவைத் திட்டங்களினாலும் யுத்தத்துக்கு முன் சமூகத்திலிருந்த வகுப்பு வேற்றுமைகள் மெல்ல மறைந்து கொண்டு வருகின்றன. செல்வர் என்று சொல்லத் தகும் மேல்வகுப்பினர் தற்சமயம் 100-க்கு ஒருவர் கூடக் காண்பதரிது. தொழிலாளர் வருமானம் மத்திய வகுப்பினரின் வருமானத்தை விட வேகமாக உயர்ந்து கொண்டு போகிறது. இவ்விரு வகுப்பினரிடையே உள்ள வேற்றுமைகள் மங்கிக் கொண்டு வருகின்றன. **ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில்'** என்று அன்று பாரதியார் கூறிய வாக்கு இன்று பிரிட்டனில் நனவாகத் திகழ்கிறது. வேலையில்லாதவருக்குப் பென்ஷன், நோயாளிக்குச் சிகிச்சை, அனாதைக்கு ஆதரவு கொடுக்கக் கூடிய சக்திவாய்ந்த பராமரிப்பு ஆட்சி அங்கு வேரூன்றித் தழைத்து விட்டது. இனி எக்கட்சி ஆட்சி புரியினும் மக்களின் வாழ்க்கைத்தரம் மேலும் மேலும் ஓங்கி உயருவதற்கான அஸ்திவாரத்தை பிரிட்டனில் சோஷியலிஸம் அசைக்க முடியாதபடி அடிகோலிவிட்டது. இம்மாதிரியான பராமரிப்பு ஆட்சி நம் நாட்டிலும் நிறுவுவதையே நமது தலைவர்கள் தங்கள் இலட்சியமாகக் கொண்டுள்ளார்கள்.

சென்னை வானொலி நிலைய இசைவு பெற்றது.

சிறு கதை

# கடைசிச் சந்திப்பு

நா. புகழேந்தி

நள்ளிரவு! ஊரிலே பாலைவன அமைதி பரிபூர்ணமாக நிலவிக் கொண்டிருந்தது. சிறு சிறு விளக்குகள் தெருவின் மூலைகளில் நின்றபடி காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தன. அதன் சுடர்கள் ஒலியை நாலாபுறமும் காற்றின் கோலத்துக்கு ஏற்றபடி சிந்திக்கொண்டிருந்தன. அந்த நள்ளிரவில் ஆள் நடமாட்டமேஇல்லாதபோதுஒருவன் தெரு வழியே போய்க் கொண்டிருந்தான். அவன் நடையோ வேகமாகச் செல்லும் குதிரையின் நடையைப் போட்டி போடுவது போல இருந்தது. ஆள் நடமாட்டமே இல்லாத தெருவில் இந்த மனிதன் போகிறானே இவன் யார்? என்று கேட்போம் என்று நினைத்தனவோ என்னவோ? சில நாய்கள் ளொள்-ளொள் என்று கூப்பாடு போட்டன. நான் செல்லும் நேரத்தில்—அறியப் போகும் முக்கிய செய்தியில் உங்களிடம் பேச நேரமில்லை. எனக்காக ஒரு உருவம் காத்துக் கொண்டிருக்கும் என்பது போல் அவன் பேசவில்லை. உள்ளத்திலே நினைத்தபடி போய்க்கொண்டிருந்தான். நாங்கள் இருக்கிறோம் எங்களைக் கவனியாமல் போகிறானே என்ற எண்ணங் கொண்ட கற்கள் அவன் நடைக்குத் தடையிட்டன. தடைக் கற்கள் பல கிடந்தாலும் அவற்றைத் தாண்ட இந்தக் கால்கள் உரத்தவைகளே! என் கடமையே பெரிது என்று முணகிய படியே போய்க் கொண்டிருந்தான். அவனின் வேகமான நடை பல தடைகளையும் சில தெருக்களையும் கடந்து ஒரு தோட்டத்தின் பின்புறமாகச் சென்று கொண்டிருந்தது. அப்போது அந்தத் தோட்டத்திலிருந்து "அத்தான்" என்ற ஆசை மொழி கேட்டது. திரும்பிப் பார்த்தான். இளமையின் பயிர்—இன்னிசையின் நாதம்—அவனின் அத்தை மகள் "கமலா" அங்கே நின்று கொண்டிருந்தாள்! மையிருட்டில் அவள் உருவம் சரியாகத் தெரியவில்லை என்றாலும் அவளின் குரல் தெளிவாகக் கேட்டது.

இதுவரை தடைக் கற்களைக் கடந்து வந்த அவன் கால்கள் தடைபட்டு நின்றன. "கமலா" என்றான். யாழின் இனிமையான குரலில் 'அத்தான்' என்றாள் அவள் உணர்ச்சியெல்லாம் ஒன்று சேர்த்தபடி. மேகத்தை தாண்டிய வெண்ணிலா போல வேலியைத் தாண்டி தோட்டத்திற்குள் நுழைந்தான். வெண்

ணிலா கண்டு மகிழும் உலகு போல அவனைக் கண்டு அவள் மகிழ்ந்தாள்.

மரத்தடியில் இருவரும் அமர்ந்தனர். அவர்களின் மனதிலே சொல்லமுடியா இன்ப எண்ணங்கள் ஊற்றெடுத்துக் கொண்டிருந்தன. என்றும் "நாளை" என்னும் வருங்காலத்தை எண்ணும்போது அவர்கள் உள்ளம் துடித்தன. அந்தத் துடிப்பின் பிரதி பிம்பம் அவர்களை மௌனப் பொம்மையாக்கி விட்டது. எவ்வளவு நேரந்தான் மௌனமாக இருந்து நேரத்தை வீணாக்கினார்களோ! அவர்களுக்கே தெரியாது. பின்பு மௌனத்தைக் கிழித்துக் கொண்டு வெளி வந்தது கமலாவின் பெருமூச்சு. அது அமைதியைக் கிழித்துக் கொண்டு வேகமாக வீசும் புயல் போல் பட்டது அவனுக்கு. 'அத்தான்!' என்றாள், அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. முகத்தை அவன் மார்பிலே புதைத்த வண்ணம் விம்மி! விம்மி அழத் தொடங்கிவிட்டாள்"கமலா அழாதே!' அவனின் ஆறுதல் மொழி. அவையும் ஏக்கத்தின் பிரதிபலிப்பாகவே அவள் மனதிலிருந்து வெளி வந்தன.

அத்தான்! அம்மா உங்களுக்கு அளித்த வரத்தை அடுத்தவன் அபகரித்துக் கொள்ளப் போகிறானே?

"கமலா" என்னசெய்வது, அத்தையின் வரம் எனக்குக் கிட்டும். நாம் அன்புடன் வாழலாம் என்றுதான் எண்ணியிருந்தேன். ஆனால் அத்தையின் வரம் ஒரு நத்தைக்குக் கிடைத்து விட்டதே......?

அத்தான்! நான் அப்பாவிடம் எவ்வளவோ எடுத்துச்சொன்னேன். கண்ணீர் விட்டுக் கதறினேன். கொஞ்சங்கூட அவர் மனம் இளகவில்லை. ஒரேயடியாகப் பணத்துக்கே பணிந்து விட்டார்.

பணத்தைக் கண்டதும் பரவசப்படுவது மனித இயற்கை. ஆனால் பணத்திற்குப் பின் பள்ளம் இருப்பதை உணர வேண்டாமா? மாமா பணத்தையே பெரிதாக எண்ணுவதால் அந்தப் பள்ளத்தை அறியாது, உன் வாழ்வையே அப் பள்ளத்தில் தள்ளுகிறார்.

அத்தான் வாழ்க்கையின் முதற்படி காதல்! அப் படியற்ற வாழ்வாக என் வாழ்வு முடிய வேண்டும் என்பது அப்பாவின் எண்ணமா? நான் துன்பப் படத்தான் வேண்டுமா?

கமலா! இது அவரின் எண்ணமல்ல. சமுதாயத்தின் சீர்கெட்ட நிலையின் படப் பிடிப்பு. அதை அப்படியே பின் பற்றுகிறார் மாமா.

அத்தான்! நாளை விடிந்தால் எனக்குத் திருமணம்! உங்களின் கரத்திலே தவழ்ந்த நான்—உங்களின் உள்ளத்தோடு என் உள்ளத்தையும் ஒன்று சேர்த்த நான்! எப்படி உயிரோடு மண மேடையில் அடுத்தவன் பக்கத்தில் அமருவது...? அத்தான் நாம் ஒருவருக்கும் தெரியாமல் இப்பொழுதே ஓடி விடலாம் வாருங்கள்......!

கமலா! இது தப்பான எண்ணம். முதலில் உணர்ச்சியின் வசத்திற்குட் பட்டு நாம் ஓடி விடலாம். ஆனால் நாளை நாம் துயரப்படவேண்டியவர்களாகி விடுவோம் உன்

தந்தை மிகவும் பொல்லாதவர். நம்மை கோர்ட்டில் கைதிக் கூண்டிலே நிற்கும்படி செய்து விடுவார். நான் ஆண். பொறுத்துக் கொள்வேன். ஆனால் உன் மனமோ புண்படும்; வேதனைப் படும்; வேண்டாம் இச் செய்கை.

அத்தான்! நீங்களா இப்படிக் கூறுகிறீர்கள்?

கமலா! கலங்காதே; உன் நன்மையைக் கருதியே நான் இப்படிக் கூறுகிறேன்—உன்னை மகிழச் செய்யவே நான் கூறுகிறேன். நான் நாடோடி! என்னை மறந்து விடு. புதிதாக வரும் கணவனுடன் இன்பமாக வாழ்க்கை நடத்து. என்னை இனி நினையாதே. நான் ஓர் கானல் நீர். மறைந்துவிட்டதாகவே எண்ணிக் கொள். நான் வருகிறேன். இதுதான் என் **"கடைசிச் சந்திப்பு."** இனி என்னைப் பார்க்கவே முடியாது. வருகிறேன். கமலாவின் பதிலை எதிர்பாராமலே வேலியைத் தாண்டி வேகமாக வெளியேறி விட்டான் காளியப்பன். கமலா கல்லாய்ச் சமைந்து விட்டாள். அவளின் கண்கள் கண்ணீரை உகுத்தன. எந்த அத்தானை தன் இன்ப மணாளனாக இருக்க வேண்டுமென்று எண்ணினாளோ, அதே அத்தான் அவள் மீது துன்ப மொழிகளை வீசி விட்டுப் போகும் அளவுக்கு அவள் தந்தை நடந்து கொண்டார். அதற்காக யாரைக் குறை கூறி என்ன பயன்?

**(2)**

செங்கமலம் கிராமம் மிகச் சிறப்பு வாய்ந்தது. அதிலே தான் திருவாளர் தியாகமூர்த்தி வாழ்ந்து வந்தார். அவரின் ஒரே ஒரு அருமை மகள் கமலா. செல்வமாக வளர்த்துச் சிறப்பாகப் படிக்க வைத்தார். மகனில்லையே என்ற குறையை மகளை வளர்ப்பதிலேயே செலவழித்தார். இப்போது தியாகமூர்த்திக்கு மகள், மகன் எல்லாம் கமலாவே தான். தியாகமூர்த்தியின் மனைவி அனங்கவல்லி. அடிக்கடி நோய் வாய்ப் பட்டு அரை உயிருடன் இருந்தாள். அவளுக்கு அண்ணனின் மகன் காளியப்பன்; ஐந்து வயதிலேயே தாயைப் பறி கொடுத்தவன். தந்தையின் பாதுகாப்பில் வளர்ந்தவன். என்றாலும், அவனின் வளர்ச்சியில் பெரும் பங்கு அத்தை அனங்கவல்லியைச் சாரும். கமலாவைக் காளியப்பனுக்கே மணமுடிக்க வேண்டும் என்பது அனங்கவல்லியின் ஆசை. அந்த ஆசை நிறைவேறுமுன், அவள் படுத்த படுக்கையாகி விட்டாள்.

அனங்கவல்லி உயிருக்கு ஊசலாடுகிறபோது காளியப்பனையும் கமலாவையும் அழைத்தாள். இருவர் கரங்களையும் ஒன்றாகச் சேர்த்தபடி ஏதேதோ கூறினாள். அவள் உதடுகள்தான் அசைந்தன; பேச்சு கேட்கவில்லை. என்றாலும் உணரும் தன்மை இருந்தது. உணர்ந்து கொள்ளலாம்! தியாகமூர்த்தியும் உணர்ந்து கொண்டார். அவள் விருப்பப் படியே செய்வதாக வாக்களித்தார். அனங்கவல்லியின் உயிர், ஒரு கொடியை அதன் துணைக்கு ஒரு கோலோடு சேர்த்து விட்டோம் என்றெண்ணத்துடன் நிம்மதியாகப் பறந்தது.

— **தமிழ்த்தென்றல்**

அனங்கவல்லி இறந்தபின் காளியப்பன் தியாகமூர்த்தியின் கடையிலே வேலை பார்த்துக் கொண்டே, அவர் வீட்டிலே மண மகன் போல சாப்பிட்டுக் கொண்டு இன்பமாக நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தான். கமலாவும் காளி யப்பனுடன் மிக அன்பாகவே நடந்து கொண்டாள்! ஏன்? அவள் தனக்கு எதிர்காலக் கணவன் என்ற எண்ணத்துடன். அந்த எண்ணம் நிலைத்து நிற்கவில்லை; இடையிலே பெரிய இடி!

மாமா எப்பொழுதும் என்னு டன் மிக அன்பாக இருப்பாரே... இப்பொழுது ஏன் இப்படி இருக்க வேண்டும்! என்னை எடுத்ததற் கெல்லாம் முறைத்துப் பார்ப்பதேன் ......? கோபமான வார்த்தைகளை ஏன் என்மேல் வீச வேண்டும் என்ற எண்ணம், தியாகமூர்த்தி அவனிடம்நடந்துகொள்ளும் திருப்தி யற்ற காரணங்களால் காளியப்பன் மனதிலே எழுந்தது. எத்தனையோ நாட்களாக அந்த எண்ணத்தை ஒரு முடிவுக்குக் கொண்டுவர முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தவன் ஒரு நாள் நேரிலே கேட்டு விடுவது என்று துணிந்து விட்டான்.

தியாகமூர்த்தி நாற்காலியில் சாய்ந்தபடியே கணக்குப் புத்த கத்தைப் பார்வையிட்டுக் கொண்டி ருந்தார். அப்பொழுது உள்ளே நுழைந்த காளியப்பன், மாமா என் ருன் மிக அடக்கமாக. திரும்பிப் பார்த்த மூர்த்தி, என்ன சேய்தி? என்ருர் படபடப்பாக. ஒன்றுமில்லை ......என்று குரலைக் குறைத்தான். அவ்வளவுதான் மூர்த்தியின் கண் களில் கோபக்கனல் வீசத் தொடங்கி விட்டது. பேய் நீ போற போக்கு எனக்குக் கொஞ்சங் கூட பிடிக்கவில்லை இந்தா பார்.....! என்று கணக்குப் புத்தகத்தைத் தூக்கி எறிந்தார். அது அவன் காலைப் பதம் பார்த்தது என்ருலும் சிரமத்துடன் எடுத்துப் பார்த்தான். அவன் முகம் பயங்கரக் குறிகளை உதிர்த்தது. தீயில் மிதித்தவன் போலத் துடித்தான். மூர்த்தியைப் பார்க்க அவன் கண்கள் கூசின; தலை கவிழ்ந்து நின்ருன்.

பார்த்தாயடா.......உன் போக்கை......ஊம்.....ஊரான் பிள் ளைக்கு சோறு போட்டால் இப்படித் தான். உன்னைக் கண்டித்து என்ன பயன்! என் மூளையை செருப்பால் அடிக்கனும். இன்னும் உன்னை வைத்திருக்கிறேன் பாரு என்று காளியப்பனைத் திட்டியபடி தன்னை யும் நொந்து கொண்டார். காளியப் பனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. ஊரான் பிள்ளை—உன்னைக் கண் டித்து! இப்படி அவர் பேசிய பேச் சுக்கள் மெல்லிய நாக்கில் ஊசி ஏற்றிப் பெருக்கும் வேதனையைப் போல அவன் மனத்தைக் குடைந் தன. இதுவரை மூர்த்தியின் பழிச் சொற்களுக்கு ஆளாகாத காளியப் பன், சுதந்திரமாகக் காட்டில் திரிந்த வேழம் திடீரென தன்மேல் வேல் பாய்ந்தால் எப்படித் துடிக்குமோ அதைவிடப் பன்மடங்கு மூர்த்தியின் பழிச் சொல் கேட்டுத் துடித்தான். மாமாவின் மனமாறுதலால் மனம் உடைந்திருந்த காளியப்பன் கணக் கில் பிழை ஏற்படும்படி செய்து விட் டான்! திருத்திக் கொள்ளலாம்; குற்

றமில்லை. ஆனால் மூர்த்திக்கோ அவனின் சிறு துரும்பு போன்ற குற்றம் பெரிய தூணாகத் தெரிந்தது. அதனால் ஐந்து நிமிடக் கதை அரை நாள் கதையாக—அதுவும் ஆபத்தில் முடிந்தது!

"இனி உனக்கு இடமில்லை; மூட்டை கட்டு உன் வீட்டுக்கு." இதுவும் மூர்த்தி உதிர்த்தசொற்கள்தான். அதற்கு மேல் காளியப்பனால் அங்கு நிற்க முடியவில்லை. எனவேதான் வீட்டை விட்டு வெளியேறினான். வாசல்படிக்கு வந்திருப்பான். அதற்குள் கமலா......அத்தான் என்றாள் அழுகுரலுடன். கமலா கலங்காதே, உன் அன்னையின் மேல் அடங்கா அன்பு கொண்டவராக உன் தந்தை இருந்தால், உன் அன்னை சாகும் போது அளித்த வார்த்தைக் கண்டிப்பாக நிறைவேற்றுவார். அப்போது நாம் மீண்டும் வாழ்க்கையில் புகலாம்......வருந்தாதே. உன் தந்தையின் கோபம் தணியட்டும். உண்மையை உணரட்டும். நம் மீது பாசம் கொள்ளட்டும். அப்போது நான் வருகிறேன்...! காளியப்பன் போய் விட்டான்......கமலா அவன் போகும் திக்கையே கண்ணீர் மல்கும் கண்களோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

(3)

காளியப்பன் வீட்டை விட்டு வெளியேறியதும், கமலாவுக்குக் கணவன்தேட ஆரம்பித்தார் மூர்த்தி. உண்மையில் அவர் மனம் காளியப்பனைச் சுற்றி வட்டமிட்டாலும், அவனிடம் பணம் இல்லை என்ற ஒரு காரணத்தால் அவனை மகளுக்கு ஏற்ற கணவனாக்க விரும்பவில்லை. அந்தக்காரணத்தைக் கொண்டுதான் அவன் தன் வீட்டில் இருந்தால் வேறு கணவனைத் தேட முடியாது—வரவும் மாட்டார்கள் என்ற எண்ணத்தோடு வீட்டை விட்டு வெளியேற்றினார். இப்பொழுது கமலாவுக்கு ஏற்ற கணவன் கிடைத்து விட்டான். பணத்திற்குப் பணம், படிப்பிற்குப் படிப்பு, அழகுக்கு அழகு எல்லாம் அந்தக் கணவன் பால் அடங்கியிருந்தன! என்றாலும் கமலாவின் அன்பு உள்ளத்தை அவனால் பெற முடியுமா? அவளுடன் சிரித்து விளையாடத்தான் முடியுமா? அந்தப் பாக்கியம் காளியப்பனுக்குத்தான் உரிமையாயிற்றே!

கமலாவின் திருமணத்திற்கு நாள் குறித்த மூர்த்தி அவளுக்கு வரப்போகும் கணவனைப் பற்றிக் கூறவேயில்லை. அவனைப் பிடிக்குமா உனக்கு? என்று கேட்கவும் இல்லை. திருமணத்தைச் சிறந்த முறையில் நடத்தி விட வேண்டும் என்றுதான் எண்ணினாரே தவிர அவர் சிந்தனைக்கு வேலை கொடுக்கவே இல்லை, கமலாவுக்கு வரப்போகும் கணவன், **அழகுவேலன்** என்றவர்தான் என்று தெரிந்ததும் உள்ளம் துடித்தாள்; தந்தையிடம் முறையிட்டாள்; அத்தானைத்தான் மணந்து கொள்வேன் என்றாள். மூர்த்தி ஒன்றுமே சொல்லவில்லை, பேசாது எழுந்து போய் விட்டார். துடிதுடித்த கமலா தந்தைக்குத் தெரியாமல் அத்தானை வரச் சொல்லி வேலைக்காரி மூலம் தூது விட்டாள். அந்தத் தூதின் முடிவைத் தான் மேலே கொடுத்துள்ளேன்.

— **தமிழ்த்தென்றல்**

(4)

சந்திப்பு முடிவுற்றது; அதுவும் கடைசிச் சந்திப்பாக முடிவுற்றது! கமலா கூறினாள்: "அத்தான் கடமையை மறந்தீர்கள்" என்று! கடமையை நிறைவேற்ற எண்ணங் கொண்டால் நம் வாழ்வே ஆபத்தாக முடியும் என்றான் காளியப்பன். கடைசியாக நீயாவது இல்வாழ்வு வாழ்க. உன் வாழ்வுக்கு நான் இடையூறு பண்ணவில்லை என்று கூறி விட்டுத் தன் சந்திப்பை முடித்துக் கொண்டு போய் விட்டான்!

கொட்டு முழக்கத்துடன் மூர்த்தியின் வீட்டிலே திருமணம் நடந்து கொண்டிருந்தது. கமலாவும் அழகுவேலனும் மணமக்களாக மண மேடையில் அமர்ந்திருந்தார்கள். அதைப் பார்த்துப் பரவசப் பட்டுக் கொண்டிருந்தார் மூர்த்தி அப்போது அந்த அதிகாலையில் ஒருவர் இடுகாட்டிலே அமர்ந்து புலம்பிக் கொண்டிருந்தார். கீழே ஒரு பிணம் கிடந்தது: அந்தப் பிணம்தான் காளியப்பன்! தான் இருந்தால் அவள் தன்னைக் காணும்போதெல்லாம் வேதனைப் படுவாள், அவள் வாழ்க்கையிலே இன்பம் இராது என்று எண்ணிய காளியப்பன் நஞ்சை உட்கொண்டு, கடமையைச் செய்ய உத்தரவிட்ட தன் அத்தையின் பிணக் குழியிலே மண்டியிட்டபடி கிடந்தான்! அதைக் கண்டுதான் அவன் தந்தை புலம்பிக் கொண்டிருந்தார்.

# தமிழ்த் தென்றல்

(மாதப் பத்திரிகை)

## ஆண்டுக் கட்டணம்

| | | |
|---|---|---|
| உள் நாடு (ஆண்டு மலர் உள்பட) | ரூ. | 4--0--0 |
| வெளி நாடு ,, ,, | ரூ. | 5--0--0 |

## தனி இதழ்

| | | |
|---|---|---|
| உள் நாடு | ரூ. | 0--4--0 |
| வெளி நாடு | ரூ. | 0--5--0 |

மாதிரிப் பிரதி வேண்டுவோர் ஐந்தணா தபால் தலை அனுப்புக!

## விளம்பர விகிதம் ஒரு தடவைக்கு

| | | |
|---|---|---|
| அட்டை பின்புறம் | ரூ. | 100 |
| ,, உட்புறம் | ரூ. | 75 |
| புத்தகம் உள் ஒரு பக்கம் | ரூ. | 50 |
| ,, அரைப் பக்கம் | ரூ. | 25 |

நீடித்த கால விளம்பரங்களுக்குக் கூலி மலிவு!

*பிற விபரங்கட்கு எழுதித் தெரிந்து கொள்க.*

**தமிழ்த்தென்றல் அலுவலகம்**

வன்னிய நாடார் தெரு, விருதுநகர்.

— தமிழ்த்தென்றல்

# அந்த நாளும் வந்திடாதோ ?

[ க ச ம் ]

அமிழ்தினும் இனிதென அடைமொழி பெற்ற
தமிழின் பெருமையைத் தன்னிடம் கேட்டால்
மக்கள் படுத்தும் மடமைப் பண்பைத்
துக்கம் தணியாத் துயருடன் சொல்லும்.
அந்தோ அந்தோ அன்பு மக்களே !
விந்தை விந்தை விவரமாய்க் கேட்பீர் :
செந்தமிழ் நாட்டில் அந்தமில் மக்கள்
எந்த முறையில் என்னை வதைப்பர்
அந்த முறையை அறிவுடன் விரிப்பின்
சிந்தை திரும்பிச் செய்வதை மறப்பீர்.
தமிழே தெரியா தகைசால் பெரியர்
அமிழ்தே தமிழென அறைவதைத் தெரிவீர்
கண்ணிய முள்ள கனதன வான்கள்
பண்ணித் தமிழையே பகர்வதைப் பார்ப்பீர் !
ஆங்கில வார்த்தை ஒன்றை அமைத்து
ஆங்கொரு பண்ணியை அதன்பின் பொருத்தி.
'வாக்பண்ணும் வழியில் மீட்பண்ணிய மனிதனை
ஷேக்பண்ணிய பின்தான் டாக்பண்ணத் துணிந்தான்'
என்றே பேசும் இதுவும் தமிழா ?

— தமிழ்த்தென்றல்

எண்ணிப் பாரீர் பண்ணித் தமிழை
கண்ணைக் கசக்கவா? கண்ணீர் உதிர்க்கவா?
மத்திய சர்க்கார் மனதைப் பாரீர்
உத்தம குணத்திலும் ஒருசில ஒதுக்கல்
பங்கமில் மக்கள் பண்புடன் நினைத்தே
"ஜங்ஷன்" என்பதை சந்திப் பாக்கினர்
நல்ல காரியம் நலமுறச் செய்தனர்.
எல்லாம் அப்படிச் செய்தால் என்னவோ?
சிறுநீர் பாய்ச்சச் செல்லு மிடத்தில்
"புருஷர் ஸ்திரி" போகும் இடமென
வெண்மை எழுத்தில் எழுதிய தேனோ?
ஆண்பெண் என்றால் ஆங்கென் அவதி!
அடுக்குத் தொடர்கள் அநேகம் பொருந்த
எடுத்த பதமெலாம் எளிதில் சேர்த்து
கருத்தைக் கருதாது கண்டதைக் கூட்டி
பொருத்த மற்றுப் பேசுதல் தமிழா?
ஆங்கில மன்றி அடுத்த மொழியோ?
வடமொழி யன்றி வேறு மொழியோ?
எந்த மொழியும் நமக்கென் எதிரி
சொந்த மொழியே அந்தர மாட
வந்த மொழியின் வழியும் தெரியா
மந்தப் பதங்களை மடமையாய்ச் சேர்த்து
கந்த லாக்கும் கதம்பப் பான்மை
எந்த நாள்தான் இங்கிருந் தோடுமோ?
அந்த நாளும் வந்தி டாதோ?

— தமிழ்த்தென்றல்

# ஏழைக்கு ஏது இன்பம்!

[ மதுரைச்சிவம் ]

இன்பம்.........துன்பம்.........
இன்பம்.........................துன்பம்
இவ்விரண்டும் வாழ்க்கையிலே மாறி மாறி வருகின்றன். யாருக்கு? ஏழைக்கா? செல்வனுக்கா?......... சிந்திக்க வேண்டியது.

"செல்வமுடையவன் என்றும் இன்பத்தையே நுகர்கிறுன். அவனுக்கேது துன்பம்?" என்று எண்ணுபவர் பலர். உண்மையில் நோக்குமிடத்து ஏழையைக் காட்டிலும் ஒரு வகையில் அதிகத்துன்பமடைகிறுன் செல்வன் என்று சொல்லலாம். 'பொருள் தம்மிடம் நிறைய இருக்கிறது' என்ற ஒரு எண்ணத்தினுல் மட்டுமே தான் அவன் இன்பத்தையடையலாமே தவிர, அப்பொருளை ஈட்டுவது, அதைசேகரிப்பது, அதைத் தகுந்த முறையிலே பாதுகாப்பது போன்ற வகைகளிலே அவனடைகின்ற துன்பம் அளவிடற்கரியது. தன்னிடமுள்ள செல்வம் நல்வழியில் பயன்பட வேண்டும் என்ற நன்னேக்கங் கொண்ட செல்வன், தனது செல்வம் 'தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டே' யாம் என எண்ணுவான், 'மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என நினைத்து, 'வறியார்க்கு வேண்டுவனவற்றைக் கொடுப்பான்' 'அற்ருர் அழிபசி தீர்ப்பான்; 'கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று' எனக் கொள்வான்.

இவன் தான் இன்பத்தை நுகர முடியும்; இசைபட வாழ முடியும். இதைத் தான் நம் வள்ளுவப் பெருந்தகையும்

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்" என்றும்
"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு" என்றும் கூறுகிறுர்.

மற்று, செல்வம் நிறைய இருந்தும் அதைப் பயன் படுத்தாதிருப்பவனே, பிறர்க்கு கொடுக்கவும் செய்யான்; தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பிலாதவனுவான்; 'கெடாத நல்லறமும் செய்யான்' தானும் வயிருர உண்ண மாட்டான்; நன்ருக உடுக்கவுமாட்டான்;பிறர்க்குப்பயன் படக் கூடிய அச்செல்வத்திற்கு, அவன் ஒரு 'நோய்' போல இருப்பான். இத்தகையோனிடம் செல்வம் வந்து சேர்ந்தால், அச்செல்வம், இவனிடம் இருப்பதில் பயனில்லை எனக் கருதி, அச்செல்வனிடமிருந்து எப்பொழுது 'செல்வோம்' எனவே கருதும். இவனுல் யாருக்குப் பயன்? பிறர்க்குக் கெடுதலே யுண்டாகும். இவன் ஊரிலே இருப்பதானது, "ஊரின் நடுவே நச்சு மரம் பழுத்திருக்கிறது; இம்மரத்தை வேரோடு வெட்ட வேண்டும்" என்று தான்

மற்றவர் என்னுவர். ஆகவே அவன் அச்செல்வத்தைப் பெறுவதிலே அடையும் துன்பத்தைக் காட்டிலும், அதைக்காப்பதிலே கடுந் துன்பம் அடைகிறான்.

"ஈட்டலும் துன்ப மற்றீட்டிய
வொண்பொருளைக்
காத்தலு மாங்கே கடுந்துன்பம்—
காத்தல்
குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பங்
துன்பக்
குறைபதி மற்றைப் பொருள்" என்ற நாலடிச் செய்யுள் இங்கு நோக்கத் தக்கது.

எனவே, முன்னே கூறியது போல, தமது செல்வத்தைப் பிறர்க்குக் கொடுத்து இன்பம் அடைபவர் மிக மிகச் சிலரே; மற்று, பின்னே கூறியாங்கு, தமது செல்வத்தைத் தானும் துய்க்காது பிறர்க்குங் கொடுக்காது துன்பப்படுபவரே அதிகம்.

இனி, ஏழையோ, 'தன்னிடம் பொருள் இல்லை' என்ற காரணத்தினால் கவலை யடைகிறான்; வயிறார உணவு கிடைக்கவில்லையே என ஏங்குகிறான்; தன் மக்களைப் படிக்க வைப்பதற்கு ஏற்ற வசதி யில்லையே எனக் கலங்குகிறான்; குடியிருக்க வசதி யற்ற நிலையைக் கண்டு நிலை குலைகிறான். இவ்வாறாகப் பல்லாற்றானுந் துன்பப் படுகிறான் ஏழை.

பாலுக்குச் சக்கரை யில்லை எனத் துன்பமுறுகிறான் செல்வன்; கூழுக்கு உப்பில்லை என வருந்துகிறான் ஏழை. 'ரோல்ஸ் ராய்ஸ்' இல்லை என ஏங்குகிறான் செல்வன்; காலுக்கு மிதியடி இல்லை யெனக் கலங்குகிறான் ஏழை. படுக்கப் பஞ்சு மெத்தை இல்லை யென நினைக்கிறான் செல்வன்; படுக்கப் பாயில்லை என எண்ணுகிறான் ஏழை. இவர்கள் எண்ணத்தை யறிந்த கம்பர்.

"பாலுக்குச் சர்க்கரை இல்லையென்
பார்க்கும் பருக்கையற்ற
கூழுக்குப்போட உப் பில்லை
யென்பார்க்கும் குற்றித்தைத்த
காலுக்குத் தோல் செருப் பில்லை
யென்பார்க்கும் கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை இல்லை
யென்பார்க்கும் விசனமொன்றே"
என்று பாடியுள்ளார்.

எனவே, துன்பம் பலவகை. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதத் துன்பம் உண்டு. துன்பம் வருவது இயற்கை. இவ்வுடம்பு ஒரு வீடு போன்றது; இதிலே துன்பமாகிற விருந்தினன் வருவான்; தங்குவான்; பின் சென்று விடுவான். அவன் 'ஏழை' 'செல்வன்' என்ற வேறுபாடு கருதான். ஆகவே துன்பம் யாவர்க்கும் உடைமை.

இத்துன்பத்தை நீக்கி இன்பம் பெற வேண்டுமா? வழி என்ன? அதுவே வள்ளுவனார் காட்டும் வழி. அவர் குறள் வழியைக் காட்டியுள்ளார். அவர் காட்டும் வழியே சென்றால், யாரும், யாண்டும் இன்பம் பெறலாம். ஏழையாயினுமாகுக செல்வனாயினுமாகுக.

முதலில் நம் வள்ளுவப் பெருந்தகையார், துன்பம் வராதிருக்க, செய்ய வேண்டிய வழி என்ன என்பதை அறிவுறுத்துகிறார். முதலில்,

"யாரிடத்திலும் அன்பு செலுத்து. அன்போடு கூடிய இனிய சொற்களைச் சொல். அச்சொல் யாரிடம் இருக்கிறது? உன்னிடமே தான் இருக்கிறது. அதைப் பயன் படுத்து. அதனால் என்ன நன்மை தெரியுமா? துன்பத்தைத் தருகின்ற வறுமை உன்னிடம் அணுகாது. பிறர்க்குத் துன்பம் செய்யாத இன்சொற்களைச் சொல்; அது என்றும் இன்பந்தரும்.

"சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்"

அதுமட்டுமல்ல; மாசற்றாது கேண்மையை மறவாதே; நடுவு நிலைமையற்ற செயலைச் செய்யாதே; உயிரினுஞ் சிறந்த ஒழுக்கத்தை ஓம்பு; தீயொழுக்கத்தைக் கைவிடு. ஏனெனில் அது என்றும் இடும்பைதரும்.

"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்."

பிறர் பொருளைக் கவர எண்ணாதே; அந்த எண்ணத்தால் துன்பமேயுண்டாகும். பெரியாரைப் பேணி ஒழுகு; இல்லையேல் பேரா இடும்பை வரும். ஆராயாது நட்புச் செய்தல் போலப் பிறிதோர் கேடு இல்லை யாதலால், ஆராய்ந்து தெளிந்து நட்புக் கொள்: ஆராய்ந்து தெளிந்த பின் ஐயப்படாதே.

"தேரான் தெளிவுந் தெளிந்தான்கண் ஐயுறவுந்
தீரா இடும்பை தரும்"

இவ்வாறாக, துன்பம் வராமல் இன்பத்தை யடைய வழி வகுத்த நம் வள்ளுவர், துன்பம் வந்துற்ற காலைச் செய்யவேண்டுவது யாது என்பதையும் கூறுகிறார்.

துன்பம் எப்பொழுது வருகிறது? தான் எண்ணிய எண்ணம் ஈடேறாதபோது. எண்ணியஎண்ணம் ஈடேற யாது செய்தல் வேண்டும்? முயற்சி, முயற்சி, முயற்சி! 'முயற்சி திருவினையாக்கும்' 'முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்' அன்னார் 'மெய்வருத்தம் பாரார்; பசி நோக்கார்'; 'ஊழி பெயரினும் தாம் பெயரார்'

"தெய்வத்தா னாகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்" என்பது நம் பொய்யில் புலவனின் பொருளுரை.

எனவே இன்பம் விழைபவன் முயற்சி செய்தல் வேண்டும். முயற்சி செய்வதை விரும்பாமல் இன்பத்தை மாத்திரம் விரும்புவானாயின், அவ்வின்பத்தை யடையப்பெறாது துன்புறுவான். 'உலைவின்றித் தாழாதுஞற்றின்' ஊழையும் வென்றுவிடலாம் என்ற உண்மையை யுன்னி, உறுதியோடு முயன்றால் இன்பம் பெறலாம். இடையே இடுக்கண் வந்தால் யாது செய்ய வேண்டும் என்பதற்கு நமது வள்ளுவர் 'இடுக்கணழியாமை' என்ற ஓர் அதிகாரமே வகுத்திருக்கிறார். அதிலே,

இடையே இடுக்கண் வந்தாலும் உன் முயற்சியில் தளராது நில்; கலங்காதே. துன்பம் வருவது இயற்கை என்று எண்ணு. இன்பம் வருங்காலத்தில் இயல்பாக வருமே —சிரிப்பு— அதை இடுக்கண் வருங்கால் செய்க. அச்செயல் தளர்ச்சியை

யை நீக்கிக் கிளர்ச்சியைக் கொடுக்கும். எனவேமேல் ஆவதைச் செய்து வளர்ச்சி யுறலாம்.

"இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்"

அது மட்டுமல்ல. வெள்ளத்தனைய இடும்பைகள் வந்தாலும் அவைகள் உள்ளத்தின் ஓர் கோட்பாடே எனக் கொண்டு, அவ்விடும்பைகளை இன்பமாக நினை. துன்பம் வரும்போது அத்துன்பத்திற்கு அஞ்சேன் என்று அறை கூவி, நீ ஒரு துன்பத்தை அதற்குக் கொடு. அலையாமல் நின்று உன்னை அலைக்க வந்த துன்பத்தையே அலைத்துவிடு.

"இடும்பைக் கிடும்பை படுப்பர்
இடும்பைக்
கிடும்பை படாஅ தவர்"

துன்பங்கள் அடுக்கடுக்காக வந்தாலும், உண்மையுணர்வும் திண்மையுங் கொண்டு உள்ளம் கலங்காதிரு. துன்பப்படுங்கால் உன் வாழ்க்கையில் நீ நுகர்ந்த இன்பப் பகுதிகளை நினைவுக்குக் கொண்டு வா. செல்வம் பெற்ற காலத்தில் 'யான் பெற்றேன்' என்று அச்செல்வத்தைப் பற்றி மகிழாதிருந்தால், அச்செல்வம் அற்ற காலத்தில் நீ துன்பப் படாமலிருப்பாய். துன்பங்கள் வந்து தங்குகின்ற இடம் இந்த உடம்புதான் என்று கொள். இன்பத்தை விழையாது இடும்பையே இயல்பு என்று கருது. 'இடும்பைக் கிடும்பை இயல் உடம்பு இது அன்றோ' என்று எண்ணினால் 'துன்பமே வருங்காலைத் துயருறுதல்' இல்லை.

"இன்பம் விழையான் இடும்பை
இயல்பென்பான்
துன்ப முறுதல் இலன்"

இன்பத்தை நுகருங் காலத்தில் அதனை இனிது என மிக விரும்பாதவன் துன்பத்தை அனுபவிக்குமிடத்துத் துயருறான். இன்ப நலங்கள் எய்திய பொழுது இறுமாந்து மகிழ்பவன், துன்பங்கள் தொடர்ந்த காலத்தில் துயருழந்து அழிகிறான். உணர்வுடையாரும் அறிவுடையாரும் ஒரு காலத்தும் தம் நிலை குலையார். எவ்வளவு அல்லல்கள் இடையே வந்துற்ற போதிலும் அவற்றை யெல்லாம் நீ நல்லனவாகக் கொண்டு, உன் உறுதி குன்றாது முயற்சி செய்; அம்முயற்சியால் நீ வெற்றியும் பெறலாம். உனக்கு வரும் துன்பத்தை இன்பமாக நீ கருதிக் கொள்ளப் பழகிவிட்டால்,பகைவரும் விரும்பிப் புகழ்தற் கேதுவாகிய மேன்மையை நீ அடையலாம். பகைவரே யில்லாமல் பழகும் வகையை யறிந்துவிட்டால் தடையில்லாத இன்பத்தைத் தப்பாமல் நீ பெறலாம்.

"இன்னாமை இன்ப மெனக்கொளின் [ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு"

இதுகாறும் கூறியவாற்றான், துன்பம் வராமல் இன்பம் அடைவதற்கும், துன்பம் வந்துற்றபோது அத்துன்பத்தைப் போக்கி இன்பத்தைப் பெறுவதற்கும் நம் வள்ளுவப் பெருந்தகை காட்டிய வழிகளைக் கண்டோம்.

இனி, இன்பம் அடைய இறுதி வழி ஒன்று உண்டு. அவ்வழியே சென்றால் உறுதியாக இன்பம் பெறலாம். அவ்வழி எது? அதுவே தமிழ்; தமிழ் பயிலல்! இன்பத்தை நுகர வேண்டுமானால் தீந்தமிழைப் பருக வேண்டும். அதுவே இடுக்கணை நீக்கி

— தமிழ்த்தென்றல்

இன்பத்தைத் தரவல்ல இறுதி மருந்து; அல்ல—அமிழ்தம்!

தமிழ்!.........ஆ! சொல்லும் போதே என்ன இனிமை! 'தமிழ்' என்ற சொல்லுக்கே 'இனிமை என்பது பொருள். 'தமிழ் தழீஇய சாயலவர்' என்றும், 'தமிழ்சேர் காஞ்சி' என்றும் புலவர்கள் இனிமை' என்னும் பொருள் படத் 'தமிழ்' எனுஞ் சொல்லை ஆண்டிருக்கின்றனர். இத் தமிழின்பத்தை—தமிழ்த் தேனை— தமிழமிழ்தத்தைக் கண்டு, சுவைத்து அதிலே மூழ்கி இன்பம் பெற்றவர் பலப்பலர்.

தம் கல்லறையிலும் 'தமிழ் மாணவன்' என்று பொறிக்கும்படி போப் ஐயரை (ஆங்கிலேயர்)த் தம் மாணவர்கட்குக் கட்டளையிடச் செய்தது எது? தமிழின்பம்! "இந்தியாவில் ஓரினம் ஏற்பட வேண்டுமானால் சென்னை மாகாணத்துக்கு அப்புறமுள்ளவரும் தமிழுணரல் வேண்டும்!" என்று காந்தியடிகளைக் கூறச் செய்தது எது? ஒரு திங்கள் தமிழ்ப் படிப்பு! நோய்வாய்ப் பட்டுக் கிடந்த போதும் தமிழ்த் தொண்டே செய்ய வேண்டும் என்ற எண்ணத்தை சுவாமிநாதய்யருக்கு உண்டாக்கியது எது? தமிழ்ச் சுவை! "செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்று பாரதியைப் பாடச் செய்தது எது? தமிழ்த் தேன்! "தமிழனாகப் பிறந்து தமிழ்ச் சுவையுணர்ந்த ஒருவன் வீடு பேற்றையும் காதலியான். அவனுக்கு வீடுபேறு தமிழ்மொழி இன்பமே யாகும். அவன் மீண்டும் மீண்டும் தமிழ் நாட்டில் தமிழனாகப் பிறந்து தமிழ்ச்சுவை மாந்தி இன்புறவே விரும்புவன்" என்று தமிழ்த் தென்றல் திரு. வி. க. வை எழுதச் செய்தது எது? தமிழமிழ்தம்; "இருந்தமிழே உன்னால் இருந்தேன் விண்ணோர்-விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" என்று கவிஞர்களைப் பாடச் செய்தது எது? தமிழரின்பம், தமிழின்பம்!!

— தமிழ்த்தென்றல்

தமிழின்பத்தைநுகர்ந்த கவிஞர் பாரதிதாசன், அதன் இன்பத்தைக் கூறுமிடத்து, 'செந்தமிழே நறுந் தேனே!' என்று விளக்கினார். "தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறும் அறிவு" என்று வள்ளுவனார் கூறியதற்கிணங்க, நம் கவிஞர் மேலும் மேலும் பல தமிழ் நூல்களைக் கற்றார்; நம் செந்தமிழ், முன்னதை விட அதிக இன்பத்தைத் தந்தது அவருக்கு. எனவேதான் கூறுகிறார்.

"இனிமைத் தமிழ்மொழி எமது—எமக்
கின்பந் தரும்படிவாய்த்த நல்
[அமுது!"

என்று. முன்பு தேன்போல இனிமை தந்த 'தமிழ்' இப்போது அமிழ்தமாக இன்பந்தருகிறது. அதோடு நின்றாரா கவிஞர்? மேலும் மேலும் ஆழ்ந்து படித்தார்; படிக்கப்படிக்க "நவில்தொறும் நூல்நயம் போல" தமிழ் முன்னதை விடப் பன்மடங்கு இன்பம் தருவதைக் கண்டார்.

"இன்பத்திற் சிறந்த இன்பம் எது?" என்று கேட்டால், எல்லோரும் கூறுவர் 'மங்கை தரும் இன்பந் தான்' என்று! ஏனெனில்,

"கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறி
[யும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள"

என்று நமது வள்ளுவரும் கூறியிருக்கிறாரல்லவா? அவள் தரும் இன்பம்! ...... அனுபவித்தவர்க்கே தான் தெரியும்! அவர்கள் கூறுவார்கள் 'அவள் தரும் இன்பந்தான் பெரிது; அவள் தரும் இன்பத்திற்கு ஈடில்லை' என்று!

அவள் தரும் இன்பத்தை விடச் சிறந்த இன்பம் வேறில்லையா? இல்லை என்றுதான் கூறுவர். யார்? தமிழ் இன்பத்தைச் செவ்வனே நுகராதார். இவ்விருவின்பத்தையும் நுகர்ந்த நம் கவிஞர் என்ன கூறுகிறார் என்று பார்ப்போம்.

நம் கவிஞர் மங்கையின் சுகத்திலே திளைத்தார்: தமிழ்ச் சுவையிலேயும் மூழ்கினர். அறிவுக் கோலினாலே இவ்விரு வின்பத்தையும் சமன் செய்து சீர்தூக்கிப் பார்க்கிறார். பார்த்துத்தான் கூறுகிறார் 'தமிழின்பத்திற்கு மங்கையின்பம் ஈடில்லை' என்று! இதோ கவிஞர் கூற்றைக் கேளுங்கள்:—

"மங்கை ஒருத்தி தரும் சுகமும்
எங்கள் மாத்தமிழுக்கு ஈடில்லை"

அதோடு நின்றாரா? 'தமிழ் எங்கள் உயிர்' என்றுங் கூறி விடுகின்றார். தாங் கண்ட இன்பத்தைப் பலரும் நுகர வேண்டுமே என்று எண்ணுகிறார் கவிஞர். 'யாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்பது ஆன்றோர் வாக்கன்றோ! ஆகவே, நம் கவிஞர் கூறுகின்றார் நம்மைப் பார்த்து "தமிழ் பயிலுங்கள்" இன்பத் தமிழ் உங்களது துன்பத்தைப் போக்கும்; சுகம் பெறலாம்" என்று.

"இன்பத் தமிழ்க் கல்வி யாவரும்
[கற்றவர்
என்றுரைக்கும் நிலை எய்தி விட்டால்—
துன்பங்கள் நீங்கும், சுகம் வரும், "
[நெஞ்சினில்
தூய்மை யுண்டாகிடும், வீரம் வரும்"
"இன்பம் எனப்படுதல்—தமிழ்
இன்பம் எனத்தமிழ் நாட்டினர்
[எண்ணுக!"

இன்பத்தை நுகர்ந்த கவிஞர் கூறுவதிலே வியப்பென்ன இருக்க முடியும்?

எனவே ஏழைத் தமிழர்களே! இன்பம் பெற அங்கும் இங்கும் ஓட வேண்டாம். நமது தாய்மொழியாகிய தமிழைப் பயில்வோம். பயிலப் பயில 'தொட்டனைத் தூறும் மணற்கேணி' போல அறிவு சுரக்கும். படிக்க வாய்ப்பு இல்லையேல், படிக்க வசதி கிட்டவில்லையேல், கேட்டு அதன் இன்பத்தை நுகர்வோம். 'கற்றில னாயினும் கேட்க' என்றார் நம் பொய்யில் புலவர். ஆனவே படிக்க முடியாவிடில், தமிழ்ச் சொற்பொழிவு—தமிழமிழ்தத்திலே மூழ்கி அதன் சுவையில் ஈடுபட்டுக் கூறுகின்றார்களே—அவர்களது பேச்சைக் கேட்போம்; இன்பம் பெறுவோம்.

நாம் 'வெண்ணிலா' என்றால், தமிழ் 'ஒளி'—நாம் 'வீரன்' என்றால், தமிழ் 'கூர்வாள்'—நாம் 'யாழ்' என்றால், தமிழ் 'இசை'—நாம் 'கடல்' என்றால், தமிழ் 'அலை'—நாம் 'உடல்' என்றால், தமிழ் 'உயிர்'—என்று எண்ணுவோம், "இனிமைத் தமிழ்மொழி எமது—இன்பந் தரும்படி வாய்த்த நல்லமுது" என்று கூறும் கவிஞரோடு ஏழைத் தமிழர்களாகிய நாமும் சேர்ந்து இன்பம் நுகர்வோமாக!

வாழ்க தமிழ்! வளர்க குறள்!!

— தமிழ்த்தென்றல்

# கல்லும் பேசுகின்றது

இரண்டாம் பேச்சு: [ கோவைக் கிழார் ]

## அந்தணரிலும் ஆறலைப் போரா?

இந்தக் கேள்வி விந்தையாகத் தோன்றும். ஆனாலும் இந்தக் கேள்வியை ஒரு கல் கேட்கிறது. அதற்கு அந்தக் கல்லே விடையும் அளிக்கிறது. அந்தப்படி பேசுகிற கல் எங்கு இருக்கிறது என்று கேட்பீர்களோ? கேட்டால், அதனை இன்றைக்கே நீங்கள் போய்ப் பார்க்கலாம். அக் கல்லைப் பார்க்க நெடுந்தொலைவு செல்ல வேண்டியதில்லை. சென்னையிலிருந்து செங்கல்பட்டிற்குப் புறப்படும் வழியில் சிங்கப் பெருமாள் கோயில் என்ற ஒரு அழகிய சிற்றூர் இருக்கின்றது. அவ்வூரில் ஒரு பாறையில் அழகிய சிறு குகைக் கோயில் இருக்கிறது. அதனைப் பார்த்து விட்டு மேற்கே ஒரு கல் தொலைவு சென்றால் **கச்சூர்** என்ற மற்றொரு சிற்றூர் இருக்கிறது. ஒரு பெரிய ஏரிக்கு மேற்கே அவ்வூர் அழகாக அமைந்திருக்கிறது. அதற்கு மேற்கே ஒரு தாழ்ந்த குன்றுக் கூட்டமும் உண்டு. இவ்வூரிலும் அக்குன்றிலும் பல கோயில்கள் இருக்கின்றன. இக்கோயில்களைச் சுந்தரமூர்த்திகள் 9ம் நூற்றாண்டில் தரிசித்து இறைவனை வழிபட்ட பெருமை அவைகள் பெற்றிருக்கின்றன இறைவனை சுந்தரமூர்த்திகள் பசியோடு களைத்துத் தனிமையாக அங்கே படுத்திருக்கையில் இரக்கங் கொண்டு அவ்வூர் சென்று அங்கு வசித்துக் கொண்டிருந்த வள்ளன்மை பொருந்திய குடிமக்களிடம் உணவு இரந்து அதனைக் கொண்டு வந்து மூர்த்திகளுடைய பசியை ஆற்றினாராம். ஆகவே இவ்விறைவனுக்கு இப்போதும் **இரந்துண்ட ஈசன், விருந்துண்ட ஈசன்** எனத் திருப் பெயர்கள் வழங்கி வருகின்றன. இத்தனைப் பெருமையும் பழமையும் பெற்ற இக் கோயிலிலே தான் சுவரில் அமைந்துள்ள கற்கள் மிகவும் வியப்பாக மேலே சொன்ன கேள்வியைக் கேட்டு அதற்குச் சரித்திரச் சான்றாக விடையும் தருகின்றன, இந்தப் பேச்சைக்கேட்கவே நீங்கள் உடனே ஆவல் கொண்டு செல்லுவீர்கள் அல்லவா? அதை உத்தேசித்து அக்கற்கள் பேசும் கதையை இனி விவரிப்போம்;

சடிலவர்மன்சுந்தரபாண்டியன் II (1276-1290 கி. பி.) தென்னாட்டை ஆண்ட காலத்தில் தொண்டை நாட்டில் பாலாற்றுக்கு அடுத்தாற்போல ஒட்டிப்பாக்கம் என்ற ஊர் ஆதிநாயச்சதுர்வேதிமங்கலம் என்ற பெயரோடு வழங்கி வந்த ஒரு பார்ப்பனச் சேரி (அக்கிரகாரம்) ஆக இருந்தது.

அதில் வாழ்ந்து வந்த அந்தணக்குடிகளிலே ஆட்கொண்டவில்லி, பாம்பணையான், மலைவாய்க்கோன், வரதன், சால்வன் என்ற பெயர்களைக் கொண்ட சிலர் இருந்தார்கள். இக்காலத்திலோ அந்தணர் பெயர்கள் வடமொழிச் சார்பு பெற்றிருக்கும். அக்காலத்தில் அவ்வாறு இல்லை. அவர்கள் தங்கள் குலத்துக்குரிய அறங்களை விட்டுத் தாழ்ந்த மக்களின் கெட்ட செயல்களில் புகுந்தார்கள். ஊர்களில் கொள்ளை அடிப்பதும் ஆண் பெண் என்று பாராமல் மக்களைத் துன்புறுத்தவும் கால்நடைகளை அழிப்பதும் கொள்ளை கொண்ட பொருள்களை விற்றுப் பணம் ஆக்கிக் கொள்வதுமான பல தீங்குகளைச் செய்து வந்தார்கள். இவ்வாறலைப்புக்களால் குடிகளுக்குப் பெருந் துன்பமும் ஆறாத ஏக்கமும் ஏற்பட்டது. இச்செய்திகள் நாட்டை ஆண்டு வந்த தலைவர்களிடம் முறையிடப் பட்டன. அப்போதைய தலைவர்களான விக்கிரம சோழ தேவன் ஆன இருங்கோளாசனியன், வாணதாரயர், திருமலைத் தாண்டாரான முனையதரையன், மற்றும் சிலரும் அக்குற்றவாளிகளைப் பிடித்து அடித்துத் தண்டம் சுமத்தி வீடுகளைக் கொளுத்திப் பின்னர் அவர்களைப் பாடி காவலில் வைத்திருந்தார்கள். ஆனால் அவர்களைச் சிறையில் அடைக்காமல் விட்டிருந்தனர். தண்டனையும் குற்றத்திற்குப் போதுமானதாக இருக்கவில்லை. ஆகவே அவர்கள் மீண்டும் கொடுமைகளைச் செய்யத் தொடங்கினார்கள். குடிகள் அக்கொடுமைகளைச் சகிக்கக் கூடாமல் முறையிட்டார்கள். அதற்குள் நாட்டின் நல்லமை பொத்தப்பிராயர் என்ற இளவரசன் வசம் வந்து விட்டது. அதனைக் கேட்ட அவ்விளவரசன் அக்கொடியவர்களைப் பிடித்து வரும் படி ஆணை இட்டான். அதன்படி வள்ளுவ நாடாழ்வான் என்ற தளகர்த்தன் மலையாளப்போர்வீரர்களை அழைத்துச் சென்று அவர்களைப் பிடிக்கப் போனதில் அவர்கள் அடுத்திருந்த மலைகளுக்கு ஓடி விட்டார்கள்.

ஓடுபவர்களைத் துரத்திச்சென்ற மலையாளப் போர் வீரர்களில் சிலரைக் கொன்று அவர்களுடைய ஆயுதங்களைப் பறித்துக் கொண்டு சென்று விட்டார்கள். ஆனால் அவர்களில் இருவர் அகப்பட்டுக் கொண்டார்கள். அவர்களின் பெயர்கள் ஆட்கொண்டவில்லி, பாம்பணையன், என்பவர்கள். அவர்களைப் பிடித்துத் திருக்கச்சூர்ச் சிறைச் சாலையில் அடைத்து வைத்தார்கள். சில நாட்கள் கழிந்த பிறகு அந்த நாட்டிற்கு அரசன் உலகுடையபெருமான்வந்து கண்ணூற்றில் எழுந்தருளியிருந்தான். அவன் திருமுன்பு அக் குற்றவாளிகள் அழைத்துச் செல்லப் பட்டார்கள். சென்ற வழிசனூர் அரசில் பாக்கத்து வனங்களின் வழியே இருந்தது. அந்த வனங்களின்வழியே செலுத்திக் கொண்டு போகையில், அக் குற்றவாளிகளின் மற்ற மூன்று உடன் பிறந்தார்களும் பல ஆட்களைக் கொன்றுவிட்டு குற்றவாளிகளை மீட்டிக் கொண்டு ஓடி விட்டார்கள். இச்செய்தி அரசன் காதிற்கு எட்டியது. அரசன் சினந்து கடுமையான உத்திரவு பிறப்பித்தான். அக்கொடியவர்களை உடனே பிடித்து அவர்களை விசாரித்து தாழ்ந்த வகுப்பினர்போல அவர்களைப் பாவித்து

அதற்குத் தக்க தண்டனை கொடுக்கும்படிக்கும், ஆணை இட்டான். மற்றும் அவர்கள் வீடுகள் பிற சொத்துக்கள் எல்லாவற்றையும் பறிமுதல் செய்து விற்று, அதனால் கிடைத்த பணத்தை ஒட்டிப்பக்கம், திருவகத்தீசுரம், இடையார் கயிலாயம் உடையார் கோயில்களுக்கு நிரந்தரமாகச் சேர்ப்பிக்கும்படிக்கும் ஆணை இட்டான். அவ்வாறே தலைவர்கள் சென்று அவர்களைப் பிடித்துத் தண்டித்து சொத்துக்களைப் பறிமுதல் செய்து அரசன் கட்டளைப்படி அக்கோயில்களுக்குச் சேர்ப்பித்தார்கள்.

அரசனுடைய உத்திரவு வியப்பாகத் தோன்றும். குற்றவாளிகளைத் தண்டித்து அவர்களுடைய சொத்துக்களை கோயிலுக்குப் பிறிமுதல் செய்த வகையில் அக் கோயில் நடத்தும் வழிபாடுகள் அக் குற்றவாளிகளின் நலத்தைக் கருதி செய்யும்படி கட்டளை இடப்பட்டதாம். அரசன் மிகவும் பய பக்தி உள்ளவன். அவ்வாறு குற்றவாளி எத்தனை கெட்ட வகை இருந்த போதிலும் அவனுடைய பிற்கால நடத்தை நலம் பெறவோ அல்லது பின்பிறப்பு நலம் பெறவோ அவன் பெயராலேயே ஒரு வழிபாடு செய்யும்படி உத்திரவு இட்டது பாராட்டத் தக்கதாகும். மக்களைச் சீர்திருத்தும் முறை இதில் காணப்படுகிறது.

மேலும் குற்றவாளிகள் அந்தணர்கள் ஆனபடியால் அப்போது வழங்கி வந்த சட்ட திட்டத்தின்படி, அவர்களுக்குக் கொடிய தண்டனை இடக் கூடாதாம். அவர்களோ இலகுவான தண்டனையால் சீர்திருத்தம் அடையவில்லை. ஆகவே அவர்களுக்கு மிகவும் கொடிய தண்டனை தரவேண்டி வந்தது. அதற்கு வேறு வழி கண்டுபிடித்து அக்குற்றவாளிகளின் பிறப்புரிமை நீக்கித் தாழ்ந்தவர்கள் என்று அந்த நிலைமையில் அமர்த்திப் பின் அவர்களுக்குத் தாழ்ந்தவர்களின் தண்டனை அளிக்கப் பட்டதாம். அக்காலத்தின் நீதி மன்ற நிலை இத்தனை சட்ட திட்டமாக இருந்தது என்று அறியலாம். தற்போது சட்டம்தான் கடுமையானது என்றால் சோழ பாண்டியர் காலத்திலும் அவ்வாறே இருந்தது என்று அறிகிறோம். விதிகளை மாற்றுவது எளிதல்ல போல் இருக்கிறது. அரசனுக்குத்தான் சட்ட திட்டம் செய்ய அதிகாரம் இருந்திருக்கிறது.

இவ்விதமான ஒரு அதிசயமான செய்தி நமது தமிழ்நாட்டில் நடந்திருக்கிறது என்று ஏழு நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த கற்கள் பேசுகின்றன. போய் உண்மையை அறிந்து கொள்ளுங்கள்.

---

— தமிழ்த்தென்றல்

# தொடர் நிலைச் சிதைவில் தோன்றிய அணுக்குண்டு

பேராசிரியர் ஈ. த. இராசேசுவரி அம்மையார்

**வரவு செலவு:**

யுரேனியம் சிதையும் போது ஆல்பாக் கதிர்களையும், பீட்டாக் கதிர்களையும் கம்மாக் கதிர்களையும் வெளி வீசுகிறது என அறிகின்றோம். ஆற்றலும் வெளி வருகிறது. இந்த ஆற்றல் மிக மிகப்பெரியது. நீரியத்தையும், உயிரியத்தையும் கலந்தால் வரும் ஆற்றலும் பெரிதென முன்னரே கண்டோம். ஆனால் ரேடான் (Radon) என்பது இதனை விட 60 லட்சம் மடங்கு அதிகம் சூட்டினைத் தருகிறதாம். யுரேனியம் வெளி வீசும் பீட்டாக் கதிர்களோ எதிர் மின்னிகள். அவற்றிற்கு எடை நம் கணக்கில் இல்லை. ஆகவே ஒரு அவுன்சு யுரேனியம் ஈயமாக மாறும்போது என்ன ஆகின்றது எனச்சற்றுப் பார்ப்போம்.

| வரவு | செலவு | | |
|---|---|---|---|
| 1 அவுன்ஸ் யுரேனியம் | ஈயம் — | 0·8653 | அவுன்சு |
| | வெளியாகும் ஹீலியக்கரு | 0·1345 | அவுன்சு |
| | ஆக மொத்தம் | 0·9998 | அவுன்சு |

கணக்கு என்றால் வரவும் செலவும் சரியாக அல்லவா இருக்கவேண்டும்? குறைவு ஏற்படுகிறதே? 0·0002 அவுன்சு எங்கே போயிற்று? கம்மாக் கதிர்தான் சூடு முதலிய கதிர் வீச்சாக மாறிப் போயிற்று. அப்படி என்றால் சூட்டினை அளக்க முடியாதா? முடியும். அது ஏறக்குறைய ஒன்றரை லட்சம் கோடி (ergs) எறுழாகலாம். அதாவது 35,000 கோடி கனலி யாகலாம். ($35 \times 10^{10}$ Calories) அதாவது 100 அடி நீளம், 100 அடி அகலம், 13·5 அடி ஆழமுள்ள தண்ணீர்த் தொட்டி நிறையத் தண்ணீரை நிரப்பி வைத்திருப்போமானால் இவ்வாறு வெளிவந்த சூடானது நம்முடைய முயற்சி ஒன்றுமின்றியே அந்த நீர் முழுவதையும் கொதிக்க வைக்கும். அதாவது அது 30° C சூடு இருக்குமாயின் 100° C அளவு சூட்டுக்கு அதனைக் கொண்டு போய் விடும். இம்மாதிரியான தொட்டி ஒன்று நம்முடைய ஊர்களில் நெல்லைக் குத்தும் எந்திரசாலையில் இருக்குமானால் பச்சரிசிக்குப் பதிலாக புழுங்கல் அரிசி செலவின்றிப் புழுக்கி அனுப்பலாம், இச்சிறிய எடை (0·0002) எவ்வளவு பெரிய சக்தியாக மாறுகிறது? இது விந்தையினும் விந்தை அல்லவா?

**இயக்கச் சங்கிலி.**

92 என்ற அணு எண் கொண்ட பொருள் யுரேனியம். அதன் அணு

எடை 238. இதில் 235 அணு எடையுள்ள ஓரிடத்தானும் (Isotope) யுரேனியமும் உண்டு. இந்த இரண்டு வித எடையுள்ள பொருள்களையும் பொதுஇயல் மின்னி (Neutrons) கொண்டு தாக்கினால் என்ன ஆகிறது என அறிஞர் ஆராய்ந்தனர். 238 எடையுள்ள யுரேனியம் தன்னைத் தாக்கவரும் பொதுஇயல் மின்னிகளை வாரி விழுங்கித் தன்னுள்ளே சிறைப் படுத்திக் கொள்ளுமாம். 235 எடையுள்ள யுரேனியம் அவ்வாறு செய்யாது தாக்குண்டு, கருச் சிதைந்து பக்கு விட்டு நிற்குமாம். இதுவே அவர்கள் கண்ட ஒரு புதுமை. யுரேனியத்தின் அணு எடை 238 எடை என்றால் என்ன? அதன் கரு எப்படி இருக்கிறது. கீழேயுள்ள படத்தில் இது விளங்கும்.

படம் 1.




யுரேனியம் → அணு எடை 238 ; அணு எண் 92.

இதனால் இதன் நடுவிலுள்ள கருவில் 92 நேர் இயல் மின்னிகள் உள்ளன. இவை மின் ஊட்டம் பெற்றவை. மிகுதியான எடை 146. இந்த எடை பொது இயல் மின்னிகளாகவே மொத்த எடை (238-92=146) கிடக்கின்றது. இதனைச் சுற்றி 92 எதிர் மின்னிகள்

தங்களுடைய நிலைகளிலிருந்து கருவைச் சுற்றிச் சுழல்கின்றன. இதனுடைய ஓரிடத்தான்களையும் கீழேயுள்ள படங்களில் காண்போம்.

படம் 2.

## யுரேனியத்தின் ஓரிடத்தான்கள் (Isotopes)

(100 எடையுள்ள 238 யுரேனியத்தில்)










இந்த யுரேனியம் 235 என்பதின் கருவினை ஒரு பொது இயல் மின்னி கொண்டு தாக்குவோமானால் என்ன ஆகிறது? அது சிதையும். அதினின்று பல பொது இயல் மின்னிகள் வெளிப்படும். அவை அருகில் உள்ள 235 எடையுள்ள யுரேனியத்தைத் தாக்கிப் பக்குவிடச் செய்யும். (Uranium fission) இவ்வாறு யுரேனிய அணுக்கள் உள்ள வரையிலும் பொது இயல்மின்னிகள் வெளியேறிக் கருவினைச் சிதைத்துக் கொண்டே வரும். இதனைக் கீழே காண்க.

படம் 3.




— தமிழ்த்தென்றல்

இவ்வாறு யுரேனிய அணுக்கள் உள்ளவரை பொது இயல் மின்னிகள் வெளியேறிக் கருவினைத் தாக்கிக் கொண்டே போகின்ற இயக்கத்தினைச் தொடர்நிலை இயக்கம் அல்லது சங்கிலித் தொடர்நிலை இயக்கம் (Chain reaction) என்று அறிஞர்கள் பேசுகிறார்கள்.

**படம் 4. சங்கிலித் தொடர்நிலை இயக்கம்.**




| 3 பொது இயல் மின்னி வெளியாகின்றன. | 9 பொது இயல் மின்னி வெளியாகின்றன | 27 பொது இயல் மின்னி வெளியாகின்றன. |
|---|---|---|

[நடுவே தாக்கப்படாது கிடைக்கின்றவை அணு எடை 238 உள்ள யுரேனியம்]

238 எடையுள்ள யுரேனியத்திலிருந்து 235 எடையுள்ள யுரேனியத்தினை அப்பட்டமாகப் பிரித்தால் மட்டுமே இந்தச் சங்கிலித் தொடர்நிலை இயக்கம் முடியும்; இல்லாமற்போனால் 238 எடையுள்ள யுரேனியமும் பிற பொருள்களும், பொது இயல் மின்னிகளை அவை மேலே சென்று அணுக் கருவினைச் சிதைக்காதபடி விழுங்கி விடும். இப்படிப் பிரிந்த 235 எடையுள்ள யுரேனியத்தினையே முதலில் ஹிரோஷிமாவில் எறிந்த அணுக்குண்டில் அமெரிக்கர் பயன் படுத்தினர்.

**மூன்று நாளில் வேறொரு புதுமை.**

மூன்று நாட்களுக்குப் பின்..... நாகாஸ்கியில் எறிந்த அணுக்குண்டில் வேறு வகையான யுரேனியம் பயன் பட்டது. 235 எடையுள்ள யுரேனியத்தினை அப்பட்டமாகப் பிரிப்பது அருமையினும் அருமை. 238 எடையுள்ள யுரேனியத்தினைப் பொது மின்னிகள் கொண்டு தாக்கினர்.

(குறிப்பு)

யு - யுரேனியம்.
நெ - என்பது நெப்டியூனியம்
பு - புளூடோனியம்.

**இங்கு குறிக்கப் படுவனவற்றின் இலக்கணம்.**

இதன் இடப்புறத்தில் எழுதும் எண் அணு எண்ணாம். இது மின் ஊட்டம் குறிக்கும். இதன் வலப்புறத்தின்மேல் எழுதும் எண் அணு எடையாம்.

பொ - பொது இயல் மின்னி (Neutron) எடை (1) மின் ஊட்டம் (0)
எ - எதிர் மின்னி (Electron) எடை (0) மின் ஊட்டம் (−1)
நே - நேர் இயல் மின்னி (Proton) எடை (1) மின் ஊட்டம் (+1)

இவைகளுக் குள்ளேயுள்ள சம நிலையைக் குறிப்பது **வாய்பாடு**



$$_{92}\text{யு}^{238}\left(\frac{146\ \text{பொ}}{92\ \text{நே}}\right) + {}_{0}\text{பொ}^{1} \longrightarrow {}_{92}\text{யு}^{239}\left(\frac{147\ \text{பொ}}{92\ \text{நே}}\right) \text{——— (i)}$$

[(குறிப்பு) இந்த வாய்பாட்டில் கவனிக்கவேண்டியது ஒன்று உண்டு. மேல் எழுதப்பெறும் தொகைகளைக் கூட்டினால் ⟶ (அம்புக் குறிக்கு) முன்னும் பின்னும் (அதாவது இருபுறத்தும்) உள்ள எண்ணின் தொகை ஒன்றுதல் வேண்டும். ஏன்? எடை மாயமாகப் போகாதன்றோ? இப்படியே கீழ் எழுதப்பெற்றுள்ள தொகைகள் இருபுறத்தும் சரியாக இருத்தல் வேண்டும். ஏன்? மின் ஊட்டம் மாயமாகப் போகாதன்றோ?]

புதிய பொது இயல் மின்னி நுழைந்ததால் எடை மட்டுமே மிகுதியாயிற்று. மின் ஊட்டம் மாறவில்லை. இந்த யுரேனியத்தின் அணு எண் 92. அணு எடை 239. இது நிலைத்திருக்கும் பொருள் அல்ல. விரைவில் மாறும். இதன் வாழ்வு 23 நிமிடம்தான். ஒரு நாழிகை ஆனதும் அதன் அற்ப ஆயுளும் முடிந்து விடுகிறது. வேறு ஒரு பிறவியை எடுக்கிறது. இதன் உதரத்தினின்று ஓர் எதிர்மின்னியாம் வீரன் குதித்து ஓடி விடுகிறான். மிக மிகச் சிறிய னே இவன் எடை. எனவே தாயின் எடை குறையவில்லை. மற்று என்ன? தாயின் கருவில் பொது

இயல் மின்னியில் ஒடுங்கி இருந்த இவ்வீரன் அங்கிருந்து ஓடுகிறான். பொது இயல் மின்னி நேர் இயல் மின்னியாக மாறுகிறது. இதனை இப்படம் விளக்கும்.




**ஒரு நாழிகை ஆனவுடன் நேரும் காட்சி இது.**

$^{239}_{92}$யு $\left(\frac{147 \text{ பொ}}{92 \text{ நே}}\right)$ ⟶ (எதிர்மின்னி ஓடுகிறது) இருப்பது $^{239}_{93}$நெ $\left(\frac{146 \text{ பொ}}{93 \text{ நே}}\right)$ ——(2)

$_{(-1)}$எ$^{0}$

(நெப்டியூனியம்)

கருவிலிருந்து எதிர்மின்னி போனது என்றால் என்ன? பொது இயல் மின்னியிலிருந்து எதிர்மின்னி போயிற்று என்றே பொருளாம். வேறு எதிர்மின்னி இருக்க இங்கு இடம் ஏது? அதனால் பொது இயல் மின்னி நேர் இயல் மின்னியாக மாறுகிறது. எனவே 147 பொது இயல்மின்னிகள் 146 பொது இயல் மின்னிகளாகக் குறைகின்றன. புதிதாக உண்டாகிய நேர் இயல்மின்னி முன்னிருந்த 92 நேர் இயல்மின்னிகளுடன் சேரும்: ஆக மொத்தம் 93 நேர் இயல் மின்னிகளாக ஆகின்றன. இதனால் நேர் மின் ஊட்டம் 93 ஆகிறது. மின் ஊட்டம் மாறினால் அணுவின் இடம் மாறுகிறது. இதற்கு **நெப்டியூனியம்** என்று பெயரிட்டனர். இந்தப் புதுப் பொருளும் உலகினை விரும்பக் காணோம். இரண்டு நாட்களில் இதனின்றும் ஓர் எதிர் மின்னி குதித்து ஓடி கதிர் வீச்சாக ஒளிர்கிறது.

$^{239}_{93}$நெ $\left(\frac{146 \text{ பொ}}{93 \text{ நே}}\right)$ ⟶ $^{239}_{94}$பு $\left(\frac{145 \text{ பொ}}{94 \text{ நே}}\right)$ + $^{0}_{-1}$எ (எதிர்மின்னி) (கதிர் வீச்சு இயக்க மாகிறது) ——(3)

(புளுடோனியம்)

**(நெப்டியூனியம் இரண்டு நாளில் புளுடோனியம் ஆகிறது)**

முன்னர்க் கூறியபடியே இங்கு பொதுஇயல் மின்னிகளின் எண்ணிக்கையில் ஒன்று குறைய, நேர் இயல் மின்னூட்டம் ஒன்று உயர்ந்து புளுடோனியம் என்ற பெயருடன் புது அணு தோன்றுகிறது. பிறவகை யுரேனியத்தை விடப் பொதுஇயல் மின்னியைப் பற்றிக் கொண்டு அதனைச் சிறை செய்யும் ஆற்றல் குறைந்தே இந்தப் புளுடோனியம் விளங்குகிறது. ஆதலின் பொது இயல் மின்னி கொண்டு இதன் கருவினைத் தாக்கினால், 238 எடையுள்ள யுரேனியம் பொது இயல் மின்னி

யைச் சிறை செய்வது போல இது சிறை செய்ய மாட்டாததால் இதன் கருவானது சிதைந்து பொதுஇயல் மின்னிகளை வெளியேற்றும். இவ்வாறு வெளியேறும் பொது இயல் மின்னிகள் தொடர் நிலை இயக்கத்தினை சீக்கிரத்தில் விளைவிக்கும். 238 யுரேனியத்தினின்று 235 எடையுள்ள யுரேனியத்தைப் பிரிப்பது அருமை எனக் கண்டோம். ஆனால் புளுடோனியத்தை 238 எடையில் பல்கிக் கிடக்கின்ற யுரேனியத்திலிருந்து எளிதில் படைக்கலாம். இவ்வாறு படைத்ததையே புதிய அணுகுண்டினில் புகுத்தி நாகாஸ்கியில் வீசி எறிந்து அந்தப் பாழினை விளைவித்தனர். இப்படி மூன்று நாளைக்குள் விஞ்ஞான முறை பழையதாகிப் போகின்ற நிலையை இந்த அணுக்குண்டு வரலாற்றிலேயே காண்கிறோம்:

படம் 5.

**யுரேனியம் 238இல் இருந்து புளுடோனியம் படைப்பது.**




( ) 238 அணு எடையுள்ள யுரேனியத்தினைச் சிறு தடிகளாகச் செய்து அலுமினியக் குழைகளுள் புகுத்தி எழுதுகரி (Graphite) அடுக்கின் உள்ளே வைக்கிறார்கள்.

[ வாய்பாடு 1, 2, 3 இவைகளைக் காண்க ]

படம் 6. கடைசி நிலையில் 3 வெளி வருவது?



ஓராண்டுச் செலவு ஒரு விநாடியில்:

யுரேனியத்தினை எவ்வாறு எழுதுகரி என்ற க்ராபைட் (graphite) கட்டுக்குள் வைத்துப் புளூடோனியத்தினை அறிஞர் படைத்து வந்தனர் என முன் பக்கத்தில் காட்டிய படம் நன்கு விளக்குகிறது. இங்கு சூட்டலைகள், கதிர் வீச்சு அலைகள் முதலியன ஒன்றாக உடன் எழுகின்றன என்றும் காண்கிறோம். இச் சூட்டலைகள் அங்கு வேலை செய்யும் தொழிலாளிகளை ஒன்றும் செய்யாதிருக்க வேண்டும்; அதற்காக அவைகளைக் குளிர் காற்றினால் அறிஞர் குளிர வைத்தனர். பிற கதிர்வீச்சு இயக்கங்கள் மக்களை அழிக்காதபடி தண்ணீர், ஈயம் முதலிய தடைகளை எழுப்பி அடுக்கி மக்களைத் தீங்கினின்றும் காத்தனர். இவைகளெல்லாம் பெரிய வேலை. யுரேனியத்தினைக் கரிக்கட்டினுள்ளே வைத்துப் பின்னர் அது புளூடோனியம் ஆன உடன் அதனை எடுத்து விட்டுப் புதிய யுரேனியத்தினைக் கட்டுக்குள் வைப்பது எப்படி என்ற பெரிய ஐயம் எழுந்தது. யுரேனியத்தினைக் கம்பிகளாகச் செருகி எளிதில் எடுப்பதற்கு ஏற்பாடு செய்தனர். இவ்வாறு புளூடோனியத்தினைப் படைத்து வரும் போது எதிர்பாராதபடி கேடு வரும் என்று தெரிந்து அதனைத் தடுக்க வேண்டும். அதற்காகச் சில காட்மியத் (Cadmium) தகடுகளைக் கொண்டு இந்தப் பெரும் பூதத்தின் பிறப்பினை அடக்கி ஆண்டனராம். இந்த அணுக்குண்டு செய்த இடத்தில் 60,000 மக்கள் வேலை செய்தனராம். இதற்கு எல்லாம் செலவு எவ்வளவு பிடித்தது என்று கணக்கிட்ட போது 40 லட்சம் டாலர் என அறிந்தனர். இந்தியாவில் நடுவிடத் துறைத்தனமும், மாகாணத் துறைத்தனமும் ஓர் ஆண்டில் செலவு செய்யும் அவ்வளவு பணம் செலவாயிற்று. அம்மம்மா !!!

வெடிப்பது எப்படி?

தொடர் நிலை இயக்கம் எழ வேண்டுமானால் புளூடோனியம் 5 இராத்தலுக்குக் குறைந்து இருந்தால் பயனில்லை. இவை ஒருங்கு திரண்டு இருந்தால் அண்டக் கதிர்கள் (Cosmic rays) பாயும் போது இவை வெடி படலாம். அண்டக் கதிர் என்றால் கதிர் வீச்சு இயக்கமன்றோ? கதிர்வீச்சு இயக்கம் என்றால் பொது இயல் மின்னியின் ஓட்டமும் நடைபெறுமன்றோ? ஆகவே, இந்த 5 இராத்தல் துண்டினைச் சிறு துண்டுகளாகப் பிரித்து வைத்திருக்க வேண்டும். யுரேனியம் இயற்கையாகவே சிதைந்தால் அணுகுண்டு வருமா? வெடி மருந்தினை அகலப் பரப்பி எரிப்போமானால் அது வெடிக்காது மத்தாப்பு எரிவது போலவாவது நல்ல விளக்கு எரிவது போலவாவது நன்றாக எரிந்து அவியும். வெடி மருந்தினை ஒரு குழையில் நன்றாகக் கெட்டித்துத் திணிப்போமானால் அது தீப் பிடித்த உடன் வெடிக்கும். ஏன் இந்த இரண்டு செயல்களுக்குள் இந்த வேற்றுமை? இரண்டும் வெடி மருந்துதானே? எரிவது குறுகிய நேரத்தில் நிகழுமானால் அவ்வளவுக்கு அவ்வளவு வெடியால் உண்டாகும் கேடு நேரிடும். எனவே வெடிக்க வேண்டுமானால் இந்தக் குறித்த அளவினை உண்டாக்க

— தமிழ்த்தென்றல்

வேண்டும். அதை எப்படிச் செய்திருப்பார்கள் என்று ஒருவாறு பேராசிரியர்கள் தெரிவிக்கின்றனர். (1) புளூடோனியச் சிறு துண்டுகளை ஒன்று சேர்க்கின்றனர். (2) அப்போது தொடர்நிலை இயக்கம் தொடர்ந்து ஓர் உயர்நிலை எல்லையை அடையும். (3) அடைந்ததும் குண்டின் "மேல்மூடி" உடையும். (4) அடைபட்ட பொருள் சிதையும் வரை தொடர்நிலை இயக்கம் நிகழும்; அணு முழுதும் சிதைத்து வரும்.

இந்த நான்கு நிலைகளும் ஒன்று இரண்டு விநாடிக்குள் முடிந்தால் தான் வெடிகுண்டின் அழிவினைக் காணலாம். மூன்று துண்டுகளாகப் புளூடோனியத்தினைப் பிரித்து அதில் இரண்டை நிலைபாக வைப்பர். மூன்றாவதைக் குறித்தபோது அதில் நுழைப்பார்கள். அது குண்டு போல அவற்றைத் தாக்கியதும் இடையீடியின்றி நிகழும்; தொடர்நிலை இயக்கத்தால் மூடி உடைபடும்.

## வானத்தில் வெடிப்பானேன்?

அணுக்குண்டினைத் தரைக்கு மேலே 1000 அடி உயரத்தில் குடிகுடையில் இறக்கிப் பற்ற வைத்து கீழே எறிந்தார்களாம். ஏன்? இவ்வாறு செய்வதால் குண்டு வீணே தரையில் பாய்ந்து துளை செய்து தன் ஆற்றலினை இழக்க வழி இல்லாமற் போகிறது. அதன் ஆற்றல் அணைத்தும் கட்டடங்களை இடிப்பதில் ஒருமுகப்பட்டுத் தாக்குவதற்கு இடமுண்டாகாது. அணுகுண்டு வெடித்ததும் கதிர் வீச்சு இயக்கங்கள் மிகமிகக் கொடியனவாக எழும். அணுக்குண்டு 1000 அடி உயரத்திலேயே வெடித்தால் அந்தக் கதிர் வீச்சுகள் தரையில் உள்ளாருக்குக் கெடுதி செய்யாமல் இருக்குமன்றோ? ஆனால் எவ்வளவு முயன்றும் கதிர்வீச்சு இயக்கத்தால் எழும் கொடுமைகளைத் தடுக்க முடியாமற் போயிற்று. ஒரு மாதத்திற்குப் பிறகும் அணுக்குண்டினால் தாக்கப்பட்ட நகரங்களுக்குத் தொலைவிலுள்ள இடங்களிலும் மக்கள் இக்கதிர்வீச்சு இயக்கத்தின் கொடுமையால் இறந்து வந்தனர். இதன் கொடுமையைக் கேட்கின்றவர்களும் திடுக்கிடுகின்றார்கள்.

## வெடியின் விளைவு:

அணுக்குண்டு வெடிக்கும் போது பெருஞ்சூடும், பேரொளியும் எழுகின்றன எனக் கண்டனர். இந்தச் சூட்டினை எப்படி அளப்பது? 10 கோடி சுழியுள்ள சூடு! இது என்ன விளக்குகிறது? சூரியனுடைய மேல் பரப்பில் உள்ள சூடு சுமார் 6000° C என்பர். அதன் வயிற்றினுள்ளேயுள்ள சூட்டினை அளக்க முடியவில்லை என்பர். அதுவும் சில கோடிதான் இருக்கும். சூரியனின் சூட்டினை விட நட்சத்திரங்களின் சூடு அதிகம். ஒருவேளை நட்சத்திரத்தின் நடுவயிற்றிலிருந்து ஒரு துண்டு வீசி எறிந்தாற்போன்று இருக்கும் எனலாமோ? கண்ணகி இட்ட தீ மதுரைமாநகரத்தை அழித்தது என்று புராணம் கூறுகிறது. வருங்கால சரித்திர நூல் அணுக்குண்டு இட்ட தீயின் வரலாற்றைக் கூறுமன்றோ? 100 கோடி சூரியப் பிரகாசம் என்று சாதாரண வழக்கில் வழங்குவர். இது பேரொளியைக் குறிக்குமாம். இங்கு கண்ட ஒளியோ கோடான கோடி சூரிய பிரகாசம் போன்றது. ஆனால், இந்த

ஒளி ஒரு சில நிமிடம்தான் இருந்தது. எங்கு கோபுரத்தின் மீது அணுகுண்டு வீசியது ஞாபகத்திற்கு வரலாம். கோபுரம் ஆவியாயிற்று. கீழே இருந்த மண் உருகிக் கண்ணாடிப் பாறையாக மாறியது. சுற்றுப் புறக் காற்று அயனி அயனியாக (ion) மாறியது. இவ்வளவுதானா அழுக்கம்? 10 [9] அட்மோஸ்பியர் * ஆக மாறுகிறது.

இந்த ஆவிப் புயல் வெற்றிடமெல்லாம் வேகமாகப் பரவும். சோடாப் புட்டியினுள்ளே காற்றின் அழுக்கத்தினால் கோலி அழுத்தி வைத்திருப்பதை நாம் எல்லோரும் அறிவோம். ஏதோ காரணத்தால் அந்தப் புட்டி வெடிக்குமாயின் உள்ளே இருக்கும் கோலி வேகமாய் ஓடி வெளியே இருக்கும் பொருளை நன்றாகத் தாக்குவதை அடிதடி சண்டைகளில் நாம் காண்கிறோமன்றோ? அவ்வாறே ஒரு புட்டியில் பல கோலிகளைப்போட்டுக் காற்றின் அழுக்கத்தினால் அவைகளை அங்கு வைத்திருப்போமானால் அது வெடித்ததும் கோலிகள் நான்கு பக்கங்களிலும் வேகமாகச் சிதறும். அந்த ஆவிப் புயலின் அழுக்கத்தினால் அருகிலிருக்கும் கட்டடங்கள் எல்லாம் அணுவாகக் கரையும். பல ஆயிர அடி தொலைவில் உள்ளவை அனைத்தும் எரிந்து சாம்பலாகும். இந்த எல்லையைத் தாண்டித் தப்பிச் செல்லும் உயிர்கள் மேலும் நரக வாதனையில் சிக்கும். கதிர் வீச்சுகள் பெரியதோர் அளவில் எழும். இவை விரைவில் மறையும். ஆனால் இவற்றில் சில பல பல நாட்கள் வரை தங்கிக் கிடக்கும். இதன் காரணமாகத் தலைமுறை தலைமுறையாகவும் சில மாறுதல்கள் விளையலாம் என்று 1946ம் ஆண்டில் நோபல் பரிசு பெற்ற ஓர் விஞ்ஞானி கூறுகிறார்.

**பிற வெடிகள்:**

1921ல் **90** லட்சம் இராத்தல் அமோனியம் நைட்ரைட் ஜெர்மானியில் வெடித்தது. 1000 மக்களைக் கொன்றது. 1500 பேர் காயம் பட்டனர். 4 மைல் வட்டத்திற்குள் பெருங் கேடு விளைவித்தது. 1945ல் **700** கிராம் யுரேனியம் (235) இந்தப் பெருங் கேட்டினை எளிதில் செய்து முடித்தது. பம்பாய்த் துறைமுகத்தில் T. N. T. என்ற வெடி மருந்து வெடித்தது. இதுவும் 700 கிராம் யுரேனியம் செய்யும் வேலைக்கு ஒப்பேயாம். நல்ல காலம். பம்பாய்த் துறைமுகத்திற்கு ஒரு மைல் தூரத்தில் வெடித்தது, பட்டணத்தின் நடுவில் வெடித்திருந்தால் என்ன ஆகி இருக்கும்? 100 கிராம் யுரேனியம் (235) வெடித்தால், 10 லட்சம் மக்கள் இறப்பது எளிது. ஆனால் இப்போது பொருண்மையில் ஆயிரத்தில் ஒரு கூறே ஆற்றலாக மாறி இத்தகைய உருத்திர தாண்டவம் ஆடுகிறது. அணு முழுவதும் ஆற்றலாக மாறினால் என்ன ஆகும்? மனிதன் எப்போதும் இந்த அணுச்சக்தியை அழிக்கும் சக்தியாக வைக்கப் போவதில்லை. ஆக்கும் சக்தியாகவும் மாற்றுவான். அதனைப் பின்னர்க் காண்போம்.

---

* (குறிப்பு) ஒரு அட்மோஸ்பியர் அழுக்கம் என்பது காற்று சாதாரண நிலையில் இருக்கும்போது பொருள்களின் மீது இயற்கையாகத் தாக்கி வரும் அழுக்கம். இது ஒரு சதுர அங்குலத்திற்கு 15 பவுண்டு என்பர். அம்மம்மா! இவ்வளவு அழுக்கமும் நம் உடலில் தாக்கினால் நமது உடல் நசுங்குண்டு போகாதா என்னும் கேள்வி பிறக்கலாம். ஆம். காற்று பல திசைகளினின்றும் தாக்குகிறது. ஒரு புறத்தேயுள்ள தாக்கல் மற்றொரு புறத்தே உள்ளதை ஈடு செய்யலாம். இதன்றியும் நமது உடலினுள்ளேயுள்ள காற்றின் அழுக்கமும் இதனை எதிர்த்து நிற்கிறது. சடப் பொருள்களின் மீது தாக்கும் காற்றும் அதனை அழிக்காது இருப்பது இதனாலேயேதான். உள்ளிடம் வெற்றிடமாக (Vacuum) இருப்பின் பொருள் நசுக்குண்டு போகும்.)

எண் 4

# கவிதையும் பயனும்

பேராசிரியர் ஆ. முத்துசிவன் M. A.

கலை உலகில் 'கலை கலைக்காகவே' "கவிதை கவிதைக்காகவே" என்பதான கூக்குரல் இருந்து வருகிறது. அதன் பொருளை நாம் ஓரளவு தெரிந்து கொள்ள முயல வேண்டும்.

பரம்பரையாகக் கவிதை பற்றி நம்மிடையே ஒரு வகை மரபு பயின்று வருகிறது. அது என்னவென்றால் கவிதையின் தொழில் சீலத்தை உருவாக்கல் என்பதாம். விமர்சகர்களும் அதே போக்கிலேயே தங்கள் கருத்துக்களைத் தெரிவித்துள்ளார்கள்—ஆழமுடையதாய், ஆர்வம் கலந்ததாய், கம்பீரம் வாய்ந்ததாய், கருத்துமிகுந்ததாய், நன்மை, அழகு, உண்மை ஆகிய இவற்றோடு உறவு கொண்டதாய் விளங்குவதே கவிதையின் குறிக்கோள் என்று எழுதி வந்துள்ளார்கள்—வாழ்க்கையையும் கவிதையையும் தனித்தனியாகப் பிரித்து வைப்பது முடியாத காரியம். உணர்ச்சி ஊற்றுக்களிலிருந்தே கவிதை சுரக்கிறதென்றிருக்குமாயின், உண்மையும் அதுதான். கவிதை வேறு வாழ்க்கை வேறு என்று எவ்வாறு பிரிக்க முடியும்? கவிதைக்கும் வாழ்க்கைக்கும் உரிய உள்ளீடான தொடர்பை எந்த விதத்தில் அறுத்தெறிவது?

கோவலனைப் பறி கொடுத்த காரணத்தால் கண்ணகி துடிப்பதைக் கண்டு நமது இதயம் துடிக்கவில்லையா? சீதை அசோக வனத்தில் கிடந்து நைவதைக் கண்டு நமது இதயமும் நெக்கு விடவில்லையா? ஒன்று சொல்லலாம். காவியத்தின் வாயிலாக அனுபவிக்கின்ற ரசத்திற்கும் நேரடி வாழ்க்கையில் அனுபவிக்கின்ற ரசத்திற்கும் உதாரணமாக சோக ரசத்தையே எடுத்துக் கொள்வோம். எவ்வளவோ வேறுபாடு காணப்படுகிறது. உண்மைதான். காவியத்தின்மூலம் வாய்க்கப்பெறும் ரசம் அத்தனை கட்டியாக இல்லை. ஆனாலுங்கூட அது ஒரு விதத்தில் துணை செய்கிறது. நாம் வாழ்க்கையில் பெற்றுள்ள ரசானுபவத்தைத் தட்டியெழுப்புகிறது. இரண்டிற்கும் அளவில்தான் வேறுபாடே தவிர இனத்தில் கிடையாது. வாழ்க்கையையும் கவிதையையும் பலவந்தமாகப் பிரிப்பதென்றால் அதெல்லாம் இட்டுக்கட்டிப் பிரிக்கப்படும் பிரிவினையே தவிர இயற்கையான பிரிவினையாகாது. ஒரே ரசந்தான் இரு துறைகளிலும் (கவிதை, வாழ்க்கை) பயின்று வருகின்றது. இரு துறைகளிலும் நாம் பேசும் மொழியைத்தான் பயன்படுத்துகிறோம். கவிதையில்

கையாளப்படும் மொழி கவிதை மொழி, வாழ்க்கையில் கையாளப் படும் மொழி பேச்சு மொழி. வேறுபாடெல்லாம் கிட்டத்தட்ட இவ்வளவு தான். இதை உணராமல் அதற்கும் தொடர்பில்லை என்று வாதாடுவது பொருந்தாது. இவ்வாறு வாழ்க்கையுடன் பொருந்தியதாக இருக்கின்ற காரணத்தால் வாழ்க்கையைப் புனிதமடையச் செய்யும் திருப்பணி கவிதைக்கு உண்டு என்பதை மறுத்துக்கூறுவது சற்று ஏற்றுக்கொள்ளமுடியாததாகக் காணப்படுகிறது.

அறிஞன் ஆஸ்கார் ஒயில்ட் (Oscar Wilde) என்பவன் இக்கட்சிக்குமறுப்புக்கூறுகிறான். வேறு யார் கூறினாலும் கொஞ்சம் அசட்டை செய்து பார்க்கலாம். அருங்கலை விநோதனை ஆஸ்கார் ஒயில்ட் கூறுவதென்றால் அதனைக் கொஞ்சம் ஊன்றிக் கவனிக்கவேண்டும்— “நூலளவில் இது ஒழுக்கம் நிறைந்த நூல் இது ஒழுக்கம் குறைந்த நூல் என்று சொல்வதற்கில்லை. இது நல்லமுறையில் எழுதப் பெற்ற நூல், இது கெட்டமுறையில் எழுதப்பெற்ற நூல் என்று சொல்லிக்கொள்ளலாம். அவ்வளவுதான். கலைஞன் எவனுக்கும் ஒழுக்கம்பற்றிய கவலை கிடையாது. அப்படியாரிடமேனும் இருக்குமாயின் அது வெறும் கொணஷ்டைதான். கலைஞர்கள் தனிப்பட்டவர்கள். அவர்களுக்கெல்லாம் அழகுடைய பொருள்கள் யாவும் அழகைக் காட்டும் பொருள்களே அல்லாது வேறில்லை. எல்லாக் கலைகளும் பயன்கலவாதவை” என்று இவ்வாறுகூறுகிறான். சாரம் என்னவென்றால், அழகுடையவற்றை அவற்றின்பாலுள்ள அழகு காரணமாக மதிக்க வேண்டுமே தவிர வாழ்க்கைக்குப் பயன்படும் பயனை வைத்து மதிப்பிடக் கூடாதென்பதாம். இன்னும் அவன் கூறுவதைக் கவனிப்போம். “ரச உணர்ச்சி என்பதாகத் தனியான ஓர் உணர்ச்சி இருக்கிறது. அதை நாம் பிரித்து விடலாம். கவிதைப் பற்றிய மதிப்பீடு எதுவும் அதனுள்ளேயே அடங்கிக் கிடக்கிறது, ஆகவே கவிதைபற்றிய அனுபவங்கள் வேறு, வாழ்க்கை பற்றிய அனுபவங்கள் வேறு. இரண்டு இனங்களையும் குழப்பிக்கொள்ள வேண்டாம். வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டுகவிதையை மதிப்பிடுவது பொருந்தாது; செல்லுபடியாகாது” என்று அழுத்தம் திருத்தமாக எடுத்துரைக்கிறான்.

இதை மறுப்பதற்கு வேறு நியாயங்களைத் தேட வேண்டாம். மகாகவிகள் வார்த்துக் கொடுத்த கவிதைகளுக்குள்ளே நுழைந்தால் போதும். வாழ்க்கை – உறவு கலவாத தனிக் கலை என்பதாகக் கவிதையைக் கருத முடியாது. ஏனென்றால் கவிதைக்குரிய விஷயம் எதுவோ அது மனிதனுடைய சிந்தனையோடும் செயலோடும் கலந்திருக்கிறது. மானுட வாழ்க்கையே அதன் பொருள். மனிதன் பேசும் மொழியே அதன் வெளியீட்டுக் கருவி. மக்கள் இனத்தார்க்குப் பொதுவான உணர்ச்சிகளே அதன் பிறப்பிடமென்றால், அதனை வாழ்க்கையினின்றும் எவ்வாறுதான் பிரிக்க முடியும்? ஆஸ்கார் ஓய்ல்டின்

— தமிழ்த்தென்றல்

வாதம் செல்லுப்படியாகாத வாதம். கலையைக் கூண்டுக் கிளியாக ஆக்க வேண்டாம். தென்னங் கீற்றினில் பொன்னூசல் ஆடட்டும்! வானத்தையும் வையத்தையும் தன்னகங் கொள்ளட்டும்! இன்னும் நமது அன்பன் ஆஸ்கார் ஒய்ல்டினிடம் சொல்வோம்: "ஐயா, கவிதையானது வாழ்க்கையைப் பற்றிச் சொல்ல வந்தால், நீர் தடியெடுத்து அடியும். ஆனல் அது வாழ்க்கையைப்பற்றிச் சொல்லவில்லை. வாழ்க்கையாகவே அமைந்து நிற்கிறது. போதும் உமது வறட்டு வேதாந்தம்" என்று மிகவும் தாராளமாக அவனிடம் சொல்வோம்.

அறிவுடை மனிதன் ஒவ்வொருவனுடைய உள்ளமும் ஓர் போர்க்களம். எண்ணங்கள், எழுச்சிகள், உணர்ச்சிகள், சுவைகள் முதலியன யாவும் முட்டி மோதிப் பெரும்போர் செய்கின்றன. இப் போர்களின் அகண்ட வடிவத்தையே கவிதைப் பரப்பினுள் காண்கின்றேம். இருப்பதையும் பார்க்கிறேம். இருக்க வேண்டியதையும் பார்க்கிறேம். இவைகள் கவிதை பற்றிய உண்மைகள் ஆகும்.

சிலர் பின் வருமாறு வாதாடலாம்: "கவிதையின் மாண்பைப் பற்றி அளந்ததெல்லாம் போதும். சில மட்டரகமான கவிதைகளைப் பார்த்தால் இப்படியெல்லாம் புகழத் தோன்றுது. நாயகன் நாயகி பாவம் எவ்வளவு புனிதமானது! எத்தனை கவிஞர்கள் அதைக் கொடும்பாவி கட்டி இழுத்திருக்கிறார்கள் தெரியுமா? அதையா கொடும்பாவி கட்டி இழுத்திருக்கிறார்கள்? கவிதைக் கலையையே கொடும்பாவி கட்டி இழுத்திருக்கிறார்கள். நாயகன் நாயகி பாவத்தில் முருகனைப் பற்றிப் பாடிய பாட்டை இதோ பாருங்கள்.

**"தோளணி மேல் கட்டவிழ்த்தான்**
**வாள் ரவிக்கைக் கட்டவிழ்த்தான்**
**தோனும் அரைப் பட்டவிழ்த்தான்**
**நாணிக் கண்ணைப் பொத்திக்**
**கொண்டேன்"**

என்று கழிகாமத்தைக் கொப்புளித்துக்கொண்டு நிற்கிறதே இந்தப் பாடல், இதனைப் பாடல் என்று கொள்ளலாமா? இன்னும் பாருங்கள்: "சண்முகமாய் நின்றானடி" என்று மிக விந்தையாக முடிகின்றது. காமத்தைத் தூண்டுவதாக இதை மதிப்பதா, அல்லது கடவுட் காதலை வளர்ப்பதாக இதனை மதிப்பதா? தபால் ஆபீஸில் முத்திரை இடுவது போன்று வாய்க்கு வந்த இழி கருத்தையெல்லாம் திணித்துவிட்டு, அப்பாலே "சண்முகமாய் நின்றானடி" என்று தெய்வ முத்திரை இட்டுவிட்டால் போதுமா? காமத்தைக் காதலாக மாற்றுவது கவிதையின் தொழிலா? அல்லது காமத்தைக் கழிகாமமாக ஆக்குவது கவிதையின் தொழிலா? கவிதைக்கும் வாழ்க்கைக்கும் தொடர்பு கற்பித்து என்னவெல்லாமோ பேசப்படுகிறதே. இம்மாதிரியான கவிதை வாழ்க்கையைப் பாழாக்கி விடுமே. இதற்கு நீங்கள் என்ன சமாதானம் கூறுகின்றீர்கள்?" என்று இவ்வாறு சிலர் கேட்கலாம். அவர்களுக்கு நல்ல முறையில் சமாதானம் கூற வேண்டுவது விமர்சகர்களின் கடமை.

— தமிழ்த்தென்றல்

கவிதைக் கலையின் போக்கையும் கவிஞனின் ஆசாரத்தையும் புரிந்து கொண்டால், சமாதானம் கிடைத்துவிடும். கவிதைக் கலை உயர்ந்தவைகள் அனைத்துடனும் உறவு கொண்டுள்ளது. மனிதனுடைய விவேகம், ஞானம், அறிவு, மதக்கோட்பாடு ஆகிய அனைத்துடனும் உறவு கொண்டுள்ளது. அல்லாமலும் மனிதனுடைய மேன்மையையும் தெய்வ மாட்சியையும் துலக்கவல்ல மகத்தான சாதனங்களுடனும் உறவு கொண்டுள்ளது. கவிதையினிடத்து இதயத்தைச் செலுத்தச் செலுத்த நமது அறிவு பெருகும், அனுபவம் விரியும். உலக அனுபவம் அனைத்தும் நம்முடைய உடைமையாகும். நாம் நமக்கென்றே படைத்து வாழும் உலகம் உண்டு. அது மிகவும் புல்லியது. மனிதர்கள் வாழும் இந்த அகண்ட உலகத்துடன் ஒப்பிட்டுப் பார்ப்பின் நமது தனி உலகம் திவலையினும் சிறியது. நமது அனுபவம் தினையிலும் குறுகியது. நமக்கு முன் எண்ணில் பல்கோடி பேர் வாழ்ந்த உலகம் இந்த உலகம். பரம்பரை நிதியாக எத்தனை எத்தனையோ அனுபவங்களையெல்லாம் நமக்குக் கொடுத்துச் சென்றிருக்கிறார்கள் நமது முன்னோர்கள். அந்த அனுபவங்களே இலக்கியத்தின் மூலம் நம்மை நாடி வருகின்றன. அவைகளை நாம் வரவேற்க வேண்டும். உள்ள நிலையிலிருந்து உயர்ந்த நிலை எய்த வேண்டும். மனித நிலை மாறி அமர நிலைக்கைகூட வேண்டும். இவ்வாறான அருமைப் பாடுகளுக்கெல்லாம் இடம் தரவல்லது கவிதை. அத்தனை புனிதமானது. அதனுடைய புனிதத் தன்மையை உணராத சிலர் அதனை இழிவு படுத்தும் முறையில் நடந்து கொள்வது வருந்தத் தக்கதே. அவர்கள் ஒன்றை நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு கவிஞனுக்கும் இருவகையான ஸ்தானங்கள் உண்டு. ஒன்று கலைஞன் என்ற ஸ்தானம். மற்றொன்று பிரஜை என்ற ஸ்தானம். கலைஞன் என்ற முறையில் எப்பொருளையும் கலைப் பொருளாகக் கொள்ளலாம். தடையே கிடையாது. தசரதன் மரணமும் சிறந்த கலைப்பொருள்தான். தாழியின் சிதைவும் சிறந்த கலைப் பொருள் தான். ஆகவே எதையும் அவன் கலைப்பொருளாகக்கொண்டு கவிதை எழுதலாம். ஆனாலும் பிரஜை என்ற ஸ்தானம் அவனுடைய உரிமைக்கு வரம்பு வகுக்கின்றது. அந்த வரம்பு — அது ஒரு வகை மந்திரக் கோடு. அதனை மீறுவானாயின், அவன் சமூகத்திற்கே கேடு செய்பவனாவான். கீழ்த்தரமான இச்சை வலையில் மனித இனத்தை வீழ்த்த ஓர் கலைஞன் முற்படுவானேயானால் அவனைச் சண்டாளர் கூட்டத்தில் தள்ள வேண்டுமே தவிர, சதுரப்பாடுடையார் கூட்டத்தில் அவனைச் சேர்க்க முற்படுவது அறிவீனமான செயல்; அவமானமான செயல்.

கவிதையின் பால் சிறப்பாகக் காணப்படுவது ரஸானுபவந்தான். மனிதன் உலக வாழ்வென்னும் கடலிலே செல்ல வேண்டுமாயின் ரஸமெனும் தோணியை நாடத்தான் வேண்டும்.

— தமிழ்த்தென்றல்

“ஆங்காரம் உள்ளடக்கி ஐம் புலனும் சுட்டறுத்துத் தூங்காமல் தூங்குகின்ற” துறவிக்கு வேண்டுமாயின் ரஸத்தின் அவசியம் தேவையில்லை. அவனுடைய உடம்பு சுடுகாடு. அவனுடைய உள்ளம் சுடுகாடு. அவன் நடமாடும் இடம் சுடுகாடு. அவனைப் பற்றிய கவலை நமக்கு வேண்டாம்.

“பொன்னவிர் மாடங்களும்
பொற்புடை மனைவியும் மதலையரும்
அன்ன நல் அணிவயல்கள்
ஆடு மாடுகள் குதிரைகளும்”

இன்னவற்றோடு வாழுகின்ற நாம் காதல், சோகம், வீரம் ஆகிய ரஸங்களைத்துறந்து வாழமுடியாது. ரஸத்துடன் வாழ்ந்து வரும் நமக்கு ரஸத்தை ரஸமாக ரஸித்து வாழத் துணை செய்வது கவிதைதான். சந்திரமதியின் புலம்பலை எடுத்துக்கொள்வோம். வாழ்க்கையில் சந்திரமதி பெற்ற புத்திர சோகத்தை எத்தனையோ பேர் பெற்றிருக்கிறார்கள். மகனைப் பறி கொடுத்த நிலையில் ஒரு தாய் வருந்தி அழும்பொழுது, அவளுடைய கணவன், “என் மனைவியாகிய இந்தப் பெண்மணி புத்திர சோகத்தை எப்படி வெளியிடுகிறாள், பார்க்கலாம்” என்று கருதி அவள் மூலம் வெளியாகும் சோக ரஸத்தை ரஸிக்க முற்படுவானா என்றால், மாட்டவே மாட்டான். அவனும் தாயைப் போன்று சோகத்தீயில் ஆழ்ந்து வெந்து பொசுங்குவான். சோக ரஸத்தை அனுபவிக்கக் கூடிய வாய்ப்பு அவனுக்குக் கிடைத்தும், ரஸத்தை ரஸமாக அனுபவிக் கூடிய வாய்ப்பு அவனுக்கு இல்லாதுபோய் விடுகிறது. இந்த ரஸ நஷ்டத்தை ஈடு செய்ய நாடகம், காவியம், சினிமா போன்ற கலை இனங்கள் பெரிதும் துணை செய்கின்றன. நாடகத்திலும், காவியத்திலும், திரையிலும் சந்திரமதியின் புத்திர சோக வெளியீட்டை ஆனந்தமாக அமர்ந்து அனுபவிப்போம். ரஸானுபவமே முக்கியமானது.

இதனை மூன்று வகைகளாக ஆராய்ச்சி வசதி கருதிப் பிரித்துக் கொள்ளலாம்.

1. கவிதை வழங்குவது ரஸானுபவமே.

2. கவிதையினுடைய மேம்பாடு எதுவும் அதன்பாலுள்ள ரஸத்தின் மேம்பாட்டைப் பொறுத்ததே.

3. கவிதா உலகம் தனியான உலகம். சுயாட்சிஉலகம் பூரணஉலகம். அதனிடம் செல்ல வேண்டுமென்றால் அதற்கென்றுரிய சட்ட திட்டங்களை மதித்தே செல்ல வேண்டும்.

சற்று விரிந்த முறையில் ஆராய வேண்டியிருப்பதால், பின்னீடு கவனிக்க வேண்டிய விஷயங்களை அடுத்த கட்டுரையில் பார்ப்போம்.

(தொடரும்

2-வது ஆடலழகி.

# ஒரு காம்பு இருதலையும் பூ

[வித்துவான், ந. சேதுரகுநாதன்]

"உலகின்கண் மக்களாகத் தோன்றிய ஒவ்வொருவருக்கும் பொருள்களை உள்ளவாறு அறிவதும் உணர்வதும் மிகவும் இன்றியமையாததாகும். உற்றதறிவது, உறுவதறிவது, நூற்பொருளறிவது, பிறர் நினைவினை அறிவது, தனக்கு இனி நிகழ இருப்பதனை அறிவது முதலிய யாவும் மிகவும் அரிய செயல்களாகும். இவ்வகையான அரிய செயல்களையெல்லாங் கருதிய ஆசிரியர் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்,

"முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்றது உணர்வார்ப் பெறின்"
என்றும்,

"எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்" என்றும்,

"ஐயப் படாஅதுஅ கத்த துணர்வானைத்
தெய்வத் தோடொப்பக் கொளல்"
என்றும்

கூறியருளினர். அந்தோ! இன்னுஞ் சில நொடிப்பொழுதில் தமக்கு நிகழ இருக்கும் இன்னல்களை யறியாமல் வாழும் உயிர்கள் எத்துணையன? அவற்றை நினைக்கும்போது எவரது உள்ளந்தான் உருகாது. அது ஒருபாலாக, ஒருவர்க்கு நிகழ்ந்தனவற்றையாவது அறிய முடிகிறதா? அது தான் நிற்க, ஒரு பாடற்பொருளை யாவது அறிய வேண்டாமா?" என்றெல்லாம் அந்த ஆடலழகி நினைத்தாள். 'வாழையுங் கரும்பும் நாட்டித் தெங்கங் குலைகளுங் கமுகங் குலைகளுந் தொங்க விட்டு எங்கும் இனிய அணிசெய்யப் பட்ட அரிய அரங்கத்தின் நடுவில் வானளாவிய உயரத்துடன் நட்டப் பட்ட கழையின்கண்ணேறி ஆடலழகி நடிக்கப் போகின்றாள்" என்பதனை கேள்வியுற்றும், பறை முழக்கத்தால் அறிந்தும் எல்லோரும் வந்து திரள் திரளாகக் கூடினர். "பதினாறு வயதுப் பைந்தொடி; இன்னும் பூப்பெய்தாத பொற்கொடி; கலையின் எல்லையைக் கண்டவள், தமிழின் வளமெலாந் தன் வளமாக நின்று பாடுவாள்; ஆடுவாள். அவள் அறியாதன இல்லை. அரிய கவிகளை உடனுக்குடன் அவள் வினாவிடையாக இயற்றிக் கூட்டத்திற் கூறி மகிழ்விப்பாள்." என்றெல்லொம் பேசிக்கொண்டு கூட்டம் நிறைந்து விட்டது. ஒரு பக்கத்திலிருந்து ஆடலழகி,

"பொன்னின் ஒளி பூவின்வெறி
சாந்துபொதி சீதம்
மின்னின் நிழல் அன்னவள்தன்
மேனியொளி மான
அன்னமும் அரம்பையரும்
ஆரமிழ்தும் நாண"

"மயிலெனப் பேர்ந்து இளவல்லியின் ஒல்கி மென் மான் விழித்துக் குயிலெனப் பேசி"க்கொண்டு வந்து அரங்கத்தினை அடைந்தாள்; நில அரங்கத்தில் நின்று, இயம்புவன இயம்பிக் கழையின் உச்சிக்கு ஏறினாள். ஏறிநின்று நிமிர்ந்து கையை விரித்துப் பருந்துபோல் வட்டமிட்டு சுழன்று ஆடத் தொடங்கினவள் ஆட்டத்தை நிறுத்திவிட்டுக் கீழே இறங்கினாள். "ஏன் அவள் இறங்குகின்றாள்?" என்ற கேள்வி எல்லோருடைய மனத்திலும் எழுந்தது. ஆனால் திருவள்ளுவர் அருளியவாறு முகம் நோக்கியும் அகம் நோக்கியும் உற்றது உணர்வாரிலர். ஆடலழகியும் தனக்கு அவ்வாறு ஒரு நிலை ஏற்படுமென்று முன்பே அறியவில்லை. இப்பொழுது நினைக்கின்றாள் "அந்தோ இவ்வளவு பெருங்கூட்டத்தில் யான் ஆட முடியாது போயிற்றே; மலையின் கண்ணுள்ள கொடுமுடிகள் சில காலத்தில் உருகும்; அதனைக் கழுகு அறிந்து அலகினால் ஆழமாகக் குடைந்து பொந்து உண்டாக்கி முட்டையிட ஏற்ற இடமாக வசதி செய்துகொள்ளும். அந்தக் கழுகுக்குப் பிறிதொரு பொருளாகிய மலையுருகுங் காலத்தையறிய முடிகிறது. ஆனால் எனக்கு யான் உருகுங் காலத்தையறிய முடியவில்லையே. உலகமெங்கணும் மலர்ந்த மலர்களையெல்லாம் வண்டினங்கள் அறியும்; ஆனால் யான் பூக்குங் காலத்தை என்னால் அறிய முடியவில்லையே. மலையினுடைய வேர் அறியும் கடலின் ஆழத்தை. பாங்கனுக்கு பாங்கன் பயன் அறிவான். ஆனால் அறியுமியல்பினர் அறிவார், அறியார் அறியார், ஒரு காம்பில் இருமருங்கும் பூத்து நின்றதை" என்றுதான் நினைத்தாள். இவ்வளவு நினைவும் ஒரு மாத்திரைப் பொழுதில் தோன்றியவை. உடனே ஒரு பஃறொடை வெண்பா வாகப்பாடினாள்; எல்லோரும் பாடலை நன்றாய்க் கேட்டார்கள். உடனே ஆடலழகி போய்விட்டாள். பலர் மீண்டும் வந்து ஆடுவாள் என்று கருதியிருந்தனர். அறிஞர் சிலர் எழுந்து புறப்பட்டார்கள்; பாடலின் பொருள் யாது? அதுவே இப்போது அறியவேண்டுவது; பெண்மை யியல்பினதாகிய மெல்லோசைதழுவி உணர்வு ததும்ப இனிய ஒழுகிசையுடன் அவள் பாடிய வெண்பாவினை நோக்குங்கள்

"கல்லுருகுங் காலங்
கழுகறியும் அக்காலம்
வையக மெல்லாம்
மலர்ந்தபூ வண்டறியும்
ஓங்கல் அறியும்
உயர்கடலின் உள்ளாழம்
பாங்கனுக்குப் பாங்கன்
பயனறிவான் மன்ற
அறிவார் அறிவார்
அறியார் அறியார்
ஒருகாம் பிருதலையும் பூ"

என்பது ஆறடியால் அமைந்த பஃறொடை வெண்பா. இதில் "ஒருகாம் பிருதலையும் பூ" என்பதிலே தான் தனக்கு நிகழ்ந்த நிகழ்ச்சியையும், தான் அப்போது ஆடுதற்கு

இயலாமையையும் அறிவு நிறைந்த ஆடலழகி குறிப்பிட்டாள். உலக இயற்கைத் தோற்றமுள்ள பொருள் களுடன் எதிர்த்து நின்று காவியப் புலவர்களும் ஓவியப் புலவர்களும் தங்கள் படைப்புத் தொழிலைச் செய் கிறார்கள்; அவற்றுளெலாம் ஒரு காம்பில் ஒரு பக்கத்தில் பூவினைக் காணலாமேயன்றி இருபக்கமுங் காணுதல் இயலாது. ஆனால் இது போது நிகழ்ந்த நிகழ்ச்சியில் அறி யும் அறிஞர்க்கு ஒரு காம்பில் இரு தலையும் பூவினைக் காணமுடியும் என்பது கருத்து. அந்த ஒரு காம்பு எது? காம்பு என்று மூங்கிலுக்கு ஒரு பெயர் உண்டு. ஆடலழகி ஏறி நின்று நடிப்பதற்கு நிறுத்தியிருந்த மூங்கிற் கழையே "காம்பு" என்ப தனாற் குறிப்பிடப்பட்டது. நிலத்துக்கு "பூ" என்பது ஒரு பெயர். ஆகவே அக்காம்பின் அடிப்பாகத்தில் பூமி யாகிய பூவும், உச்சியில் ஆடுதற் காக ஏறி நின்று பூப்பு அடைந்த ஆடலழகியாகிய பூவும் நிற்கப் பசுமையில்லாத ஒரு காம்பில் இரு மருங்கும் பூத்து நின்ற காட்சி இலங் குவதாயிற்று. இதனை எவ்வாறு அவையின்கட் கூறுவது? ஆசிரியர்—தொல்காப்பியனார், "**அவையல்கிளவி மறைத்தனர் கிளத்தல்**" என்று ஆணை யிட்டது மட்டுமல்ல, தனது நாண மும் வேறு வந்து முற்பட முனைந்து தடுதல் செய்கின்றது. ஆகவே அருந் தமிழறிந்த ஆடலழகி,

"**அறிவார் அறிவார் அறியார் அறியார் ஒருகாம் பிருதலையும் பூ**" என்ற அடிகளில் தனது நிலையை வெளிப் படுத்தினள். கழைக்கூத்தாடுங் கலைக்கு வேண்டிய கல்வியறிவு அவ் வளவென்றால் ஏனைய நிலைமைக்கு இயம்பவும் வேண்டுமா? பிறர் எழுதித் தருவதனை மனப் பாடம் செய்து நடிக்கும் கலைஞர் நிறைந்த நாடு இதனை உணருமா? கல்வியென் பதன் குறிக்கோள் நாளடைவில் நலிந்து கொண்டு போம்படி வாளா விருப்பது தகுமா? பழந் தமிழன் அறிவு நிலையை அவ்வாறு போற்றி னன். இப்போது கழைக் கூத்தாடு வதனை எவ்வளவோ இழிவாகக் கரு துவாரெனின்—ஏன் தமிழ் மொழி யையே அரசியல் அரங்கங்களில் ஏறவிடாமல் இழிவாக்குவாரெனின் ஏனையவற்றை எல்லாம் எழுதித் தொலைக்க வேண்டுமா? ஏ தமிழ் நாடே! உனக்கும் நல்ல காலம் பிறக்காதா? உனது மொழியும் கலை வளனும் பிற மொழிக்கு ஒப்பவுங் கூடப் போற்றப்படவில்லையே! இந்த நிலைமையைக் கருதும் அறிஞருக்கு நெஞ்சு பொறுக்குமா?



— **தமிழ்த்தென்றல்**

# செய்திக் கோவை

## கோவில்பட்டி தொழிலாளர் சங்கம்

உயர்திரு. S. R. வரதராஜுலு அவர்களின் சேவை என்றும் நிலைத்தோங்கும் !
— மதுரை திரு. இசக்கி

தொழிலாளர்களே ! அரசியல் படுமோசக் காரர்கள் வலையில் சிக்காதீர்கள் ! !
— சிங்கை திரு. S. V. S.

கோவில்பட்டி லாயல் மில்ஸ் தொழிலலளர் சங்கத்தின் ஆதரவில் புதுக்கிராமத்தில் 6—11—50 அன்று மாலை 5 மணிக்கு தலைவர் திரு. நல்லையா பிள்ளை அவர்கள் முன்னிலையில் தொழிலாளர் கூட்டம் நடைபெற்றது.

திருவாளர்கள், P. வெங்கிடசாமி, அய்யாபிள்ளை ஆகியோர்கள் கடவுள் வணக்கம் தொழிலாளர் கீதம் பாடினார்கள்.

மதுரைத் தொழிற்சங்க ஊழியரும், காந்திஜி நிர்மாண சேவையாளருமான, திரு. இசக்கி சேர்வை அவர்கள் விஜயம் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம் பின்வருமாறு:

உலகம் போற்றும் உத்தமர் மகாத்மாகாந்திஜியின் அடிப்படைக் கொள்கையில் அஹிம்ஸா முறையில் மதுரை, பாபநாசம், கோவில்பட்டி தொழிற்சங்கங்கள் நடைபெறுவதால் தொழிலாளர்கள் நல்வாழ்க்கையின் பயனை அடைந்து முன்னேற்ற வழியில் சென்றுகொண்டிருக்கிறார்கள். தொழிலாளர்கள் முன்னேற்றத்திற்காக எவ்வித கஷ்ட நஷ்டங்களையும் பொருட்படுத்தாது சுயநலமில்லாமல் 24 ஆண்டுகள் இடைவிடாது சேவை செய்த உயர்திரு S. R. வரதராஜுலு அவர்களைப் பாராட்டவேண்டியது தொழிலாளர்களின் கடமையாகும்.

அரசியல் பதவி மோகம். சுயநலத்திற்காக தொழிலாளர்களிடையே பாலும், தேனும் ஒழுக வாய் வீரம் பேசி தொழிலாளர்களைப் பிளவு படுத்தி இன்னல்களுக்கிலக்காக சில அரசியல் கட்சிக்காரர்கள் முனைந்து விட்டார்கள். தேசியத்தின் பெயரால் (I. N. T. U. C.) ஏற்படுத்தியதைக் கண்டு தொளிலாளர்கள் ஏமாந்துவிட வேண்டாம் என்று கூறினார்கள்.

— தமிழ்த்தென்றல்

பாபநாசம் தொழிற்சங்க ஊழியர் திரு. S. V. சுப்பையா அவர்கள் பேசியதன் சாராம்சம் கீழ்வருமாறு;

கோவில்பட்டி தொழிலாளர்கள் கூட்டுறவு பண்டகசாலை தேர்தலில் சீர்திருத்தக் கமிட்டியார்கள் (I. N. T. U. C.) சார்பாக நின்று போட்டியிட்ட பிரதிநிதிகளை லாயல் மில் லேபர் யூனியன் சார்பாக நின்ற பிரதிநிதிகளால் முறியடிக்கப் பட்டு வெற்றியடைந்ததைப் பாராட்டிய பின் தொழிலாளர்கள் எதிர்காலத்திலும் அரசியல் மோசக்காரர்கள் வலையில் சிக்கிவிடக் கூடாது. சர்வ ஜனத்தேர்தலில் மக்களின் உயர்வுக்காகப் பாடுபடுபவர்களென நன்கு அறிந்த பின்னரே தொழிலாளர்கள் தங்கள் வாக்குகளை அளிக்க வேண்டும். தொழிற் சங்கமும், முதலாளிகளும் நாட்டின் நிலைமையை நன்கு உணர்ந்து சுமுகமான முறையில் ஐக்கியமாக நடப்பதே சரியான வழியாகும். தொழில் உறவு மசோதாவில் சில குறைகள் இருந்தாலும் தற்காலத்தில் தொழிலாளர்கள் அதை வரவேற்க வேண்டியதாகும். தொழிலாளரை ஐக்கியப்படுத்தல், தொழிலாளர் அரசியல் அறிவு பெறுதல், தொழிற்சங்க முன்னேற்ற லட்சியங்களைப் பரப்புதல் ஆகிய வழிகளில் அனைவரும் சிரத்தையுடன் உழைக்க வேண்டுமென்று கூறினார்கள்.

உபதலைவர் திரு. அழகப்பன், முத்தையா பிள்ளை, அண்ணாமலை, S. கருப்பசாமி ஆகியோர்கள், கோவில்பட்டி தொழிற் சங்கத்தால் தொழிலாளர்கள் அடைந்த முன்னேற்றங்களையும், பண்டக சாலை தேர்தலில் ஒத்துழைத்த அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்கள்.

காரியதரிசி திரு. P. வெங்கிடசாமி அவர்கள் வந்தனோபசாரத்துடன் கூட்டம் முடிந்தது.

---

# அகத்தியர் வாசகசாலை ஆரம்ப விழா

> **தமிழ் வளர்ச்சியடைய தமிழ் கல்வி நிலையங்கள் அமைக்க வேண்டும்! தமிழ் நாட்டினர் தமிழ் மொழியை கற்கவேண்டியது கடமை!!**
>
> — உயர்திரு C. ராமசுப்பிரமணிய பிள்ளை அவர்கள்

விக்கிரமசிங்கபுரத்திற்குப் பக்கமுள்ள சிவந்திபுரம் கிராமத்தில் அகத்தியர் வாசக சாலை ஆரம்ப விழா 19-10-50 காலை 8-15 மணிக்கு திருவாளர் திரு C. ராமசுப்பிரமணிய பிள்ளை அவர்கள் முன்னிலையில் நடைபெற்றது. P. ராமையா தேவர் கீதம் பாடினார். திருவாளர் C. ராமசுப்பிரமணிய பிள்ளை அவர்கள் கல்வி அபிவிருத்தியடைய தொழிலாளர்கள் பொது மக்கள் விரிந்த மனப்பான்மையுடன் படிப்பகம் நிறுவ முன்வந்ததைப் பாராட்டினார்கள்.

— தமிழ்த்தென்றல்

திருவாளர் S. பரமசிவன் பிள்ளை அவர்கள் வாசகசாலையைத் திறந்து வைத்தார்கள். T. தனுஷ்கோடியா பிள்ளை தேசியக்கொடி P. L. U. கொடியை ஏற்றுவித்தார்கள்.

பாபநாசம் தொழிற் சங்கத் தலைவர் திருவாளர் R. அய்யாக்குட்டி செட்டியார் அவர்கள் காந்திஜீ படத்தைத் திறந்து வைத்து காந்திஜீ மகான் தேச மக்களுக்காக அஹிம்சையுடன் சேவை செய்ததால் அடைந்த சுதந்திரம் பற்றியும் அன்னாரின் லட்சியங்களை பின்பற்ற வேண்டுமென்றும், அகத்தியமா முனி தத்துவவார்த்தைகள், போதனை முறை பற்றிய செய்திகளை எடுத்துரைத்தார்கள்.

பாபநாசம் தொழிலாளர் சங்க காரியதரிசி திருவாளர் N. சுப்பையா மூப்பனார் அவர்கள் ஜவஹர்லால் நேரு படத்தைத் திறந்து வைத்து நேருவின் குடும்பத்தார் அனைவரும் தேச முன்னேற்றத்திற்காக செய்த சேவைகள் பற்றியும் நாட்டின் முன்னேற்றத்திற்கு உயர்ந்த நோக்குடன் துயரங்களையும் பொருட்படுத்தாது ஜவர்ஹர்லால் நேரு சிறந்த சேவை செய்து வருவதைப் பாராட்டியும், கிடைத்த சுதந்திரத்தைக் காப்பாற்ற தலைவர்கள் சுயநலமின்றி விரிந்த மனப் பான்மையுடன் சேவை செய்ய வேண்டுமென்றும் சர்க்காரோடு அனைவரும் ஒத்துழைக்க வேண்டுமென்றும் கூறினார்கள்.

திரு மகாலிங்கம் ஆச்சாரி அவர்கள் S. R. வரதராஜுலு அவர்களின் படத்தைத் திறந்து வைத்து தொழிலாளர்களுக்கு அவர் செய்துள்ள சேவை பற்றி குறிப்பிட்டார்கள்.

திரு R. செல்லையா பிள்ளை அவர்கள் தாகூர், அனிபெஸன்ட், வரதராஜுலு, வ. உ. சிதம்பரனார், ராஜேந்திரப்பிரசாத், காந்திஜீ, சிவராவ், நேரு, படிப்பகங்கள், வணிக வைசிய வாசகசாலை பாபநாசம் தொழிலாளர் சங்கம் ஆகிய பல இடங்களின் வாழ்த்துரைகளை வாசித்தார்கள்.

திரு S. கந்தசாமி அவர்கள் யாவரும் வித்தியாசமின்றி தமிழ் மொழியை கற்க வேண்டியது அவசியமென்று கூறினார்கள்.

தலைவர் உயர்திரு. C. ராமசுப்பிரமணிய பிள்ளை அவர்கள் முடிவுரையில் தமிழ் வளர்ச்சிக்காக சில தலைவர்கள் மட்டுமே சமயம் நேர்ந்த பொழுது பாடு படுகிறார்களென்றும், படிப்பகங்களில் ஆரோக்கிய விஷயங்கள், மகளிர் இல்லம், தேகப் பயிற்சி, குழந்தைகள் விழா, தமிழ் வளர்ச்சி, ஞானவழி நூல்கள் பற்றி புகட்ட வேண்டும், தமிழ் மொழி வளர போதிய கல்வி நிலையங்கள் இன்னும் அதிகம் ஏற்பட மக்கள் சிரத்தை எடுக்க வேண்டும் என்றும், நேரு படிப்பகத்தில் குறள் ஆரம்பம் செய்வது மகிழ்ச்சியடைய வேண்டியதாகும் என்றும் கூறினார்கள்.

திரு S. V. சுப்பையா அவர்கள் நன்றி தெரிவித்தார்கள்.

கீழ்க்கண்டவர்கள் படிப்பக உறுப்பினர்களாக நியமிக்கப் பட்டார்கள்.

தலைவர்:— சங்கரலிங்க தேவர்

உபதலைவர்:— மகாலிங்கம் ஆச்சாரி

காரியதரிசி:— R. செல்லையா

உபகாரியதரிசி: S. நம்பிநாராயணன்

பொக்கிஷதார்:— கிருஷ்ண பிள்ளை

மற்றும் 7 கமிட்டி அங்கத்தினர்கள்.

---

## விருதுநகர் க்ஷத்திரிய வித்தியாசாலை உயர்நிலைப் பள்ளி

## 61-வது ஆண்டு விழா

### (5—11—50)

ஞாயிற்றுக்கிழமை மாலை 5 மணிக்கு இராமநாதபுரம் ஜில்லா கலெக்டர் திரு. உந்தண்டராம் B. A., B. L. I. A. S. அவர்கள் தலைமையில் சிறப்பாக கொண்டாடப் பெற்றது. சத்திரிய வித்தியாசாலை ஆட்சிக் குழுத்தலைவரும், நகர வியாபாரக் கழக அமைச்சருமாகிய திரு. ச. வெள்ளைச்சாமி நாடார் அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்கள்.

தலைவர், இப் பெரும் பள்ளியில் சாதி, மத வேறு பாடின்றி 3000 மாணவர்க்கு சம்பளமில்லாமல் உயர்தரக் கல்வி இலவசமாக அளிப்பது நிரம்ப மெச்சத் தக்கது. விருதுநகர் நாடார்களின் நோக்கம் உயர்ந்தது என்று பாராட்டிக் கூறினார். போர்டு காரியதரிசி V. A. P. சிவசாமி நாடார் ஆண்டு அறிக்கையைப் படித்தார். சிவகாசி, உதவி கலெக்டர் திரு. M. S. ராம் ஷை. பள்ளிப் பூந்தோட்டத்தில் நிறுவப் பட்டிருக்கும் மின்சார மோட்டார் பம்பு செட்டை திறந்து வைத்தார். பின்பு மாணவர்கள் **சுகுமார்** அல்லது **சமூக சேவை** என்ற நாடகத்தைச் சிறப்பாக நடித்துக் காட்டினர். திருக்குறள் வில்லுப் பாட்டும், கதையரங்கும் நிகழ்ந்தன. திருமதி சரசுவதி ராம் அவர்கள் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கினார்கள். போர்டு காரியதரிசி திரு- V. A. P. சிவசாமி நாடார் நன்றி கூற விழா சிறப்பாகமுடிவடைந்தது.

## சி. ச. சு. நகராட்சி உயர்நிலைப்பள்ளி

## மகிழ்வுச் செலவு

சி. ச. சுப்பையா நாடார் நகராட்சி உயர்நிலைப் பள்ளியிலிருந்து 34 மாணவர்களும் 2 ஆசிரியருங் கொண்ட ஒரு குழுவினர் 17–10–50 செவ்வாய்க்கிழமை மாலை பிரயாணத்தைத் தொடங்கி **உதகமண்டலம், மைசூர், ஸ்ரீரங்கப்பட்டணம், கிருஷ்ணராஜபுரம், பெங்களூர்** ஆகிய வரலாற்று நகரங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள பல காட்சிகளையும் கண்டு களித்து 25—10—50 புதன் கிழமை நண்பகலில் விருதுநகர் மீண்டனர்.

---

## மறுமணம்

5—11—50 சிவகாசியில் நாடார் மகாஜன சங்கத்தின் ஆதரவில் உயர்திரு. W. P. A. சௌந்தர பாண்டியனாரவர்கள் தலைமையில் மதுரை, திரு. அய்ய நாடார் குமாரரும் திரு கு. மாரியப்ப நாடார் மாப்பிள்ளை **பெரியசாமி** சிவகாசி, திரு. செ. சாமிநாத நாடார் அவர்கள் குமாரத்தி நிறைநாட்செல்வி பாலிய விதவை **தங்கத்துரைச்சியை** வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டார். தமிழ்த் தென்றல் ஆசிரியர் திரு. வி. வி. இராமசாமி, மகாஜன சங்கக் காரியதரிசி திரு. ப. ரா. முத்துசாமி நாடார் திரு. கூ. மு. அ. வ. ஆறுமுக நாடார் திரு. S. S. பழனிச்சாமி நாடார், மதுரை, திரு. R. K. செந்தியப்ப நாடார், வா. அ. பு. ஜெகதீசன் முதலிய பெரியோர்கள் இவ்வாழ்க்கையொப்பந்தத்தை மனமாரப் பாராட்டி வாழ்த்துரை வழங்கினர்.

— **தமிழ்த்தென்றல்**

# மதுரையில் புலவர் திருநாள்

மதுரை வடக்காடி வீதி திருவள்ளுவர் கழகத்தில் 12—10—50 முதல் 20—10—50 முடிய கலைமகள் விழா என்னும் புலவர் திருநாள் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. முதல் நாள் விழாவாகிய 'திருவள்ளுவர் திருநாளில்' ஜமீன் ஒழிப்பு போர்டு தலைவர் திரு. ஆ. கஜபதி நாயகரவர்கள் B. A., B. L. "அறன் வலியுறுத்தல்" பற்றியும், விருதைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. சி. இலக்குவனாரவர்கள் M. O. L., "நமது அறம்" பற்றியும்; இரண்டாம் நாள் விழாவாகிய "சாத்தனார் திருநாளில்" திரு. ச. சாம்பசிவம் அவர்கள் "சாத்தனார் சால்பு" பற்றியும்; திருக்குறட் களஞ்சியம் திரு. தி. ப. சுப்பிரமணிய தாஸ் அவர்கள் "நாலும் இரண்டும்" பற்றியும் மூன்றும்நாள் விழாவாகிய "ஔவையார் திருநாளில்" ஆசிரியர் மு. முத்தையா அவர்கள் "காலமும் ஞாலமும்" பற்றியும், அர்ச். மரியன்னை உயர்நிலைப் பள்ளி தமிழாசிரியர் திரு. அ. முத்துச்சாமிப்புலவரவர்கள் "ஔவையார் அருண் மொழி" பற்றியும்; நான்காம் நாள் விழாவாகிய "கபிலர் திருநாளி"ல் "ஆள் வினையும் ஊழ் வினையும்" பற்றித் திரு. ஆ. சண்முகவேலன் அவர்களும், "கபிலர் கவிநயம்" பற்றிப் புலவரேறு திரு. அ. வரதநஞ்சைய பிள்ளை அவர்களும்; ஐந்தாம் நாள் விழாவாகிய "கம்பர் திருநாளில்" "கம்பர் கவிநயம்" பற்றி மத்திய உணவு பங்கீட்டு அலுவலர் திரு நா. இலக்குமணப்பெருமாள் நாயுடு அவர்களும்; ஆறும் நாள் விழாவாகிய "பரணர் திருநாளில்" "பயனுடையான்" பற்றித் திரு. வெ. கைலாசம் அவர்களும், "பரணர்" பற்றி அர்ச். சூசையப்பர் பெண்கள் உயர்பள்ளி தமிழாசிரியர் திரு. ஆழ்வாரையங்காரவர்களும்; ஏழாம் நாள் விழாவாகிய "நக்கீரர் திருநாளில்" "வாழும் ஊர்" பற்றி கண்டனூர் திரு. சித. இராமநாதச் செட்டியாரவர்களும், "நக்கீரர் நாநலம்" பற்றித் தியாகராசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு அ. கி. பரந்தாமனாரவர்களும்; எட்டாம் நாள் விழாவாகிய 'பெருங்கடுங்கோ திருநாளில்' 'உழவர்' பற்றித் திரு. கி. சிவப்பிரகாசம் அவர்களும், "பெருங்கடுங்கோ" பற்றி ய். சி. உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திரு. இராமையா பிள்ளை யவர்களும்; ஒன்பதாம் நாள் விழாவாகிய "இளங்கோவடிகள் திருநாளில்" "ஒரு நூல்" பற்றித் திரு. பிச்சை செட்டியாரவர்களும், "பாண்டியன் நெடுஞ்செழியன்" பற்றித் திரு. வெ. முத்து அடிகள் அவர்களும், "இளங்கோவடிகள்" பற்றி அமெரிக்கன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. ஆ. கார்மேகக் கோனார் அவர்களும் முறையே சொற்பொழிவாற்றினார்கள்.

— தமிழ்த்தென்றல்

# விருதையில் தமிழ் மறுமலர்ச்சி விழா

(25, 26, 27—10—50) புதன், வியாழன், வெள்ளி) கல்லூரியில் மாணவர் தமிழ்ப் பெருமன்றத்தின் சார்பாகத் தமிழ் மறுமலர்ச்சி விழா மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றது. முதல் நாள் இயற்றமிழ் விழாவில் பேராசிரியர் திரு. சி. இலக்குவனார் அவர்கள் எம். ஓ. எல், எல்லோரையும் வரவேற்றுப் பேசினார்கள். கல்லூரி ஆட்சிக் கூட்டத்து அமைச்சரும், "தமிழ்த் தென்றல்" ஆசிரியரும் ஆகிய செந்தமிழ்ப் புரவலர், வே.வ. இராமசாமியவர்கள் தொடக்கவுரை யாற்றினார்கள். தமிழ்நாடு இப்போது எல்லா வகைகளிலும் மறுமலர்ச்சியும் விழிப்பும் அடைந்து கொண்டே வருகிறது. பெரிய அலுவல்களிலிருப்பவர்கள் திருக்குறளை மேற்கோள் காட்டிச் சொற்பொழிவு ஆற்றத் தொடங்கி விட்டார்கள். தமிழ்மொழி தொன்மை வாய்ந்தது: **தமிழன் அறியாத உண்மையை எங்கும் எவருமே கண்டிருக்க முடியாது என்னும் உறுதிப் பாட்டுடன் தமிழை ஆராய்வோம்; போற்றுவோம் என்ற உறுதியை இம் மறுமலர்ச்சி விழாவில் தமிழர் எல்லோரும் மேற்கொள்ளுவோமாக!** என மொழிந்தனர். தொடக்க உரைக்குப் பின் க்ஷத்திரிய வித்தியாசாலை வித்துவான் வே. கருப்பையா அவர்கள் இயல் தமிழின் சிறப்பினை விரித்துரைத்து கலித்தொகை முதலிய நூல்களினின்று நயங்காட்டி சொற்பொழிவாற்றினர். திருச்சி யோவான் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. ரம்போலாமாஸ்கரனை அவர்கள் எம். ஏ. இயல் தமிழின் திறம் விரித்துத் திருக்குறள் நலங்காட்டி அரியதொரு சொற்பொழிவு ஆற்றினர். மறுமலர்ச்சி விழாத் தலைவர் திருமிகு ஆ. கசபதி நாயகர், தாம் இயற்றி வரும் அரிய திருக்குறள் பணிகளை விளக்கிக் கூறி அவையினர்க்குத் திருக்குறளிற் பேரார்வம் பெருக பெருஞ் சொல் மழை பொழிந்தார்கள்.

இரண்டாம் நாள் இசைத் தமிழ் விழாவிற்கு உயர்திரு. வே. வ. சண்முக நாடார் அவர்கள் தலைமை தாங்கினர். பாளையங்கோட்டை சேவியர் கல்லூரி பேராசிரியர் திருமிகு. ஞானசு அந்தோனி அவர்கள் இசைத் தமிழ் இயல்புகளை விளக்கிச் சொற்பொழிவு ஆற்றினார்கள். வித்துவான் திரு. இ. வி. மாரியப்பனார் அவர்களும் இசைத் தமிழ் பற்றிய சொற்பொழிவு வழங்கினர். மூன்றும் நாள் நாடக மறுமலர்ச்சி விழாவில் பெருவணிகர் உயர்திரு. கி. பெ. சி.வ. ரா. குருசாமி அவர்கள் பி. ஏ. தலைமை பூண்டார்கள். திருவையாற்று அரசர் கல்லூரிக் தமிழ் விரிவுரையாளர் வித்துவான் வி. அ. அரங்கசாமி அவர்களும் விருதுநகர் வித்துவான் மு. சதாசிவம் அவர்களும் நாடகத் தமிழ் பற்றி அரும்பெரும் கருத்துக்கள் செறிந்த விரிவுரைகள் வழங்கினர்.

— தமிழ்த்தென்றல்

பதிவு எண். M. 4880 TAMIL THENRAL NOV. 1950



ஆசிரியரும், வெளியிடுவோரும்: V. V. இராமசாமி, விருதுநகர்.
அச்சிடுவோர்: P.SV.P. ஏனாதிநாதன், தமிழ்த்தென்றல் அச்சகம், விருதுநகர்.